பார்லே

ப்ளெயின் அல்லது
டாப்பிங்ஸ் இணைந்தது
எதுவாகிலும் வெற்றி
உமதே.





நினைவு வைத்திருங்கள்
மோனேகோ உதிரியாக விற்பனை
செய்யப் படுவதில்லை.
எப்போதுமே.



வோர்ல்ட் செலக்ஷன் அவார்ட் வென்றது.




பார்லே
# மோனேகோ

ப்ளெயின் என்றால் அற்புதம்.
டாப்பிங்ஸ் இணைந்தால் அபரிமிதம்.

இந்தியாவின் அதிக அளவு
விற்பனையாகும் உப்பு பிஸ்கட்கள்.

everest/85/PP/382-tm

# ரூ 500 போட்டி

மங்கையர் மலர்

நீங்கள் ஒரு மாதர் சங்க உறுப்பினரா? வாருங்கள், உங்களுக்குத்தான் இந்தப் போட்டி.

இப்பொழுதெல்லாம் மாதர் சங்கங்கள் உல்லாசப் பயணங்கள், புனித யாத்திரைகள் கிளம்பி விடுகிறார்கள். அப்படிப் பெண்கள் சேர்ந்து போகும்போது பல சுவையான அனுபவங்கள் ஏற்பட்டிருக்கலாம்.

நீங்கள் உங்கள் மாதர் சங்கத்துடன் சென்ற பயணம் பற்றிச் சுவையான கட்டுரையாக எழுதி அனுப்புங்கள்.

பிரசுரமாகும் சிறந்த கட்டுரைக்குப் பரிசு ரூ. 500/—

(நீங்கள் மாதர் சங்க உறுப்பினராக இல்லாமலேயே, ஏதேனும் ஒரு மாதர் சங்கத்துடன் சேர்ந்து கொண்டு போயிருக்கிறீர்களா? கவலையை விடுங்கள். நீங்களும் போட்டியில் கலந்து கொள்ளலாம்.)

* கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 15.5.'86.
* கட்டுரையுடன் புகைப்படங்களும் அவசியம்.
* ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

பத்துப்பெண்கள் சேர்ந்தாலேருசிக்குமே! கற்பகம் கார்டன்ஸ் பெண்கள் சங்கம் நடத்திய சேல்ஸ் விழாவைப் பார்த்தபோது அப்படித்தான் தோன்றியது.

ஒரு பக்கம் பரபரவென்று பூரி விற்பனை. இன்னொரு பக்கம் கட்லெட்டும் சமூஸாவும் கமகமத்தது. நடுவில் ஜூஸ் சாப்பிட அழைப்பு வேறு. போதாக் குறைக்குக் காப்பியும் ஒரு பக்கம். இழுத்துச் செருகிக் கொண்டு காஸூம், கையுமாக வீட்டிலிருந்து வந்திருந்த இவர்களில் பெரும்பாலானவர்களின் கணவன்மார்கள் பெரிய பெரிய வேலையில் இருப்பவர்கள்.

செயலாளர் சீதா ராஜா சுப்ரமணியம் அவர்களை நெருங்கி விசாரித்தபோது அவர் சொன்னார்.

"பத்து வருடமாக நாங்கள் மிகவும் ஒற்றுமையாக நடத்தி வரும் சங்கம் இது. ரத்த தானத்திலிருந்து பலவிதமான சேவைகளும் செய்து வருகிறோம். மாதர் சங்கத்தை மாதர்களுக்கு மட்டுமல்லாது குடும்பத்திலுள்ள குழந்தைகள் இளைஞர்கள் அனைவரும் பங்கு கொள்ளும் விதமாக நடத்தி வருகிறோம்" என்றார்.

"சேல்"லில் இன்னொரு சுவாரசியமான விஷயம்.

மைதிலி ரங்கராஜன் அவர்களின் அலுமினிய Foil டிசைன் ஒர்க் கண்ணைப் பறிக்கும் இதைச்செய்யக்கொஞ்சம்செலவுகூடத்தான் என்றாலும் பளபளவென்றிருக்கும் போது பார்க்க ஆசையாகத்தான் இருக்கிறது.

— கிரிஜா ராகவன்.





"பொதுவாகக் கடலை எண்ணெய் உடம்புக்கு நல்லது இல்லை என்று ஒரு எண்ணம் இருக்கிறது. ஆனால், முறையாகச் சுத்தப்படுத்தப்பட்டு, மீண்டும் ஒரு முறை சுத்தப்படுத்தப்படும் கடலை எண்ணெய் உடம்புக்கு நல்லதுதான்..." என்கிறார், 'விநோத் லால்வ் எக்ஸ்ட்ராக்ஸ்' எனும் எண்ணெய் நிறுவனத்தைச் சேர்ந்த திரு. குருவேங்கட சுப்ரமணியன்.

கடலை எண்ணெய் பற்றி மேலும் சில சுவையான தகவல்கள் —

* தொடர்ந்து மிகவும் சுத்தப்படுத்தப்பட்ட எண்ணெயை உபயோகப்படுத்துவதால் தோலின் நிறம் மாறுமாம். தொடரும் பரம்பரைகளுக்கு நல்ல நிறம் கிடைக்குமாம்.

* வேர்க் கடலையை இரண்டு முறை எண்ணெய் சுத்தப்படுத்தப்பட்டு முழுமையாக எண்ணெய் பிரித்தெடுக்கப்படுவதால், எண்ணெய்ப் பசையே இல்லாத புண்ணாக்கு கிடைக்கிறதாம். இது கால்நடைகளுக்கு மிகவும் நல்லது என்கிறார்கள்.

தையல் மிஷின், மின் விசிறி என்றாலே நமக்கு "உஷா" தான் நினைவுக்கு வருகிறது. பிரபல உஷா நிறுவனத்தார் இப்போது புதிய உஷா மிக்ஸர் கிரைண்டரை தமிழ்நாட்டில் அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

தொடர்ந்து அரை மணி நேரம் ஓடினாலும் பழுதடையாத மோட்டார், விசேஷ முறையில் தயாரிக்கப்பட்ட கப்ளர், பிளேடுகள், மேல் ஜாடி சரியாகப் பொருத்தப்பட்டிருக்கிறதா என்று உறுதி செய்துகொள்ள ஒரு 'சில்வர்' சுவிட்சு, மிக்ஸியை ஓட்டவும், நிறுத்தவும், வேகத்தைக்கூட்டவும், குறைக்கவும் அழகான பியானோ ஸ்விட்சுகள் போன்ற பல சிறப்பம்சங்களுடன் உஷா மிக்ஸர் கிரைண்டர் மார்க்கெட்டுக்கு வந்துள்ளது.

சதுரமான வடிவமைப்பு கொண்ட உஷா மிக்ஸர் கிரைண்டர் பார்வைக்கு அழகாக இருப்பதுடன் இதனுடன் சேர்த்துக் கொள்ளக் கூடிய பல attachment களுக்கும் இப்போதே இதன் அமைப்பில் தேவையான வசதிகளைக் கொண்டுள்ளது.

ஆமாம், இவ்வளவு சொல்லுகிறீர்களே விலையைப் பற்றிச் சொல்லவில்லையே என்று கேட்கிறீர்களா? இல்லத்தரசிகளிடமிருந்து 'சபாஷ்' பெறுவதற்காகத் தயாரிக்கப்பட்டுள்ள தரமான எந்தப் பொருளுக்கும் விலை சற்றுக் கூடுதலாக இருந்தால் என்ன?





# ஃபாரெக்ஸ்® முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட **ஃபாரெக்ஸ்®**



# நாங்கள் தர்மகர்த்தாக்கள்!

"இப்போ சீட்டுக் கம்பெனிகளைப் பற்றி ஒருவித பயம் மக்களிடையே இருக்கு. இது நியாயமான வரவேற்கத்தக்க பயம் தான். அதனால்தான் சொல்கிறேன், மிகச் சிறந்த நம்பிக்கைக்குரிய பெரிய கம்பெனிகள் சீட்டுக் கம்பெனிகளை ஆரம்பிக்க வேண்டும். அல்லது எங்களைப் போல நிர்வாக அமைப்பை ஏற்படுத்தி, பொது மக்களுக்குப் பயமில்லாமல் செய்யணும்" என்று 'சஸ்பென்ஸ்'கடன் ஸ்ரீராம் குரூப் கம்பெனிகளின் நிர்வாகத் தலைவர் திரு. தியாகராஜன் சொன்னார்.

"அதென்ன உங்கள் நிர்வாக அமைப்பு மட்டும் உசத்தி?" என்ற கேள்வியைப் போட்டேன்...

"பொதுவாகச் சீட்டுக் கம்பெனிகள் ஒருவரின் யோசனைகள்படி ஆரம்பிக்கப்படும். அவருடைய நிர்வாகத் திறமை, புதிய புதிய உத்திகள் என இருக்கும். அவருடைய காலம் வரை மிகச் சிறப்பாக நடத்தி விடுவார். அவர் செயலிழக்கும் பட்சத்தில் சீட்டுக் கம்பெனி அவ்வளவுதான். ஆனால் எங்களுடையது அப்படியில்லை. மிகச் சிறந்த நிர்வாகத் திறனைக் கொண்டவர்களைக் கொண்டு நடத்தி வருகிறோம். ஒரு கிளையைத் திறக்கிறோம் என்றால், அதற்குத் திறமையுள்ள ஒருகுழு கிடைத்தாலொழிய நாங்கள் திறப்பதில்லை. நீண்ட காலத் தொலைநோக்குக் கண்ணோட்டத்தோடு செயல்படுகிறோம்..." என்கிறார்.

"ஆதியிலிருந்தே பெண்களுக்குத்தானே சேமிக்கும் ஆசை, பழக்கம் உண்டு. உங்கள் கம்பெனியில் எப்படி?"

"சிறு சேமிப்பெல்லாம் பெண்கள் செய்தால் கூட, இது போலச் சீட்டு பெரிய தொகை என வரும்போது ஆண்களின் யோசனையை நாடுகிறார்கள். நாங்களும், சீட்டு எடுத்துத் தொகையைப் பெறும்போது கணவன், மனைவி இருவருமே அதை அறிவதைத்தான் வரவேற்கிறோம். கணவன் பணம் பெறும்போது மனைவியின் கையெழுத்தையும் பெறுவதை ஒரு வழக்கமாகவே வைத்துள்ளோம்..." என்கிறார் மற்றொரு இயக்குநர் திரு. ராஜா.

"மக்களைக் கவரும்படியான திட்டங்கள் ஏதாவது வைத்துள்ளீர்களா...?"

"நிறைய! பொதுவாகக் காசு கொடுத்து புத்தகங்கள் வாங்குவது குறைச்சல். ஆனால் தன் குழந்தை சிறந்த அறிவைப் பெறக்கூடிய புத்தகங்களைப் பெறுகிறான் என்றால் ஆசை தான். புத்தாண்டில் எங்கள் சீட்டில் சேருபவர்களுக்கு மிகச் சிறந்த என்சைக்ளோபீடியா பரிசு என்கிறோம். ஒவ்வொரு சீட்டு வகைக்கு ஒவ்வொரு பரிசு. இந்த வருஷம் புத்தாண்டு தினத்தன்று மட்டும் நாங்கள் நாற்பது லட்சம் ரூபாய் டெபாசிட் செய்து ஆரம்பித்தோம். 7890 பேர் சீட்டில் சேர்ந்திருக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

"டாக்டர்களுக்குத் தனிச் சீட்டு என்றெல்லாம் ஆரம்பித்தார்களே..."

"அதைப் பற்றி நானே சொல்ல வேண்டுமென்று இருந்தேன்... எங்கள் மனக்குறை என்று கூட வைத்துக் கொள்ளுங்களேன். டாக்டர்களுக்குத் தனிச் சீட்டுக் குழு வைத்தோம். வேறு செக்யூரிட்டி கையெழுத்தே தேவையில்லை. அந்த குரூப்பில் இருப்பவர்களே ஒருவருக்கு ஒருவர் போடலாம் என வைத்தோம். 50,000 ரூபாய் வரை சீட்டுத் தொகை வைத்தோம். அதற்கு என்னவோ அவ்வளவு வரவேற்பில்லை.

அதே போல கணவன் மனைவி இருவரும் பேங்கில் வேலை செய்பவர்களாக இருந்தால் 30,000 ரூபாய் வரை மூன்றாவது மனிதரின் கையெழுத்தே தேவையில்லாத சீட்டு வைத்தோம். அதுவும் சரியாக வரவில்லை. இந்த இரு சாராருமே இந்தப் பெரும் தொகையைப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம்."

சென்னையில் மட்டுமே மாதத்திற்கு ஒரு கோடியே நாற்பது லட்சம் ரூபாய் வசூலித்து பட்டுவாடா செய்யும் வெற்றிக் கம்பெனியாக இவர்கள் விளங்குகிறார்கள். டிரான்ஸ்போர்ட்ஃபைனான்ஸ், இன்வெஸ்ட்மெண்ட்ஸ், டிரேடிங் டிரான்ஸ்போர்ட் என இன்னும் ஒன்பது அமைப்புக்களையும் நிறுவி இருக்கிறார்கள். சென்னை நகரத்தில் மட்டும் பல கிளைகளை உடைய இவர்கள் சமீபத்தில் திறந்த கிளை அடையாறு கிளை. மேலும் பெங்களூர், மைசூர் நெல்லூர் போன்ற வெளி மாநிலங்களிலும் வேகமாக வளர்ச்சி அடைந்து வருகிறார்கள்.

வளர்ச்சி வேகமாக இருந்தாலும் அதற்கான நிர்வாகத் திறனை வளப்படுத்திக் கொண்ட பிறகுதான் நாங்கள் பல கிளை திறக்கத் தொடங்குகிறோம் என்கிறார்கள் இவர்கள் காரணம், "நாங்கள் மக்கள் சேமிக்கும் பணத்திற்குத் தர்மகர்த்தாக்கள். அதைத் திறமையுடன் நிர்வகிப்பதுதான் எங்களுடைய கடமை என்பதைப் புரிந்து செயல்பட்டு வருகிறோம்" என்கிறார்கள்.

இந்தப் பொறுப்புணர்ச்சிதான் இவர்களின் வேகமான அபார வெற்றிக்கு பின்னணியாக அமைந்து உள்ளது என்றே சொல்ல வேண்டும்.

— மஞ்சுளா ரமேஷ்.

டாக்டர் எல். பானுமதி.
டாக்டர் டி. என். ப்ரதிபா.




தங்களின் மார்ச் மாத இதழில் 'இன்ட்ரா யூடிரைன் கான்ட்ராசெப்டிவ் டிவைஸ்' (Intra Uterine Contraceptive Device) பற்றிய கட்டுரை படித்தோம். அதுபற்றிச் சில விளக்கங்கள் தர விரும்புகிறோம்.

நம் நாட்டில், புதிதாகத் திருமணமான பெண்களுக்கு, பிள்ளைப் பேற்றைத் தாமதப் படுத்த வாய்வழியே உண்ணும் கருத்தடை மாத்திரைகளே அறிவுறுத்தப்படுகின்றன. முதல் குழந்தை பிறப்பதற்கு முன்பு, ஒரு போதும் IUCD அறிவுரை செய்யப்படுவ தில்லை. கருத்தடை மாத்திரைகளைத் தொடர்ந்து சில வருடங்கள் பயன்படுத்துவ தால் எந்தவித கெடுதலும் ஏற்படுவதில்லை. இந்த முறை 100% பாதுகாப்பானது. இதற்குப் பெண்ணிடம் சில அலர்ஜிகள் இருந்தால் மட்டுமே இது அளிக்கப்படுவ தில்லை. இரண்டாவது அல்லது மூன்றாவது குழந்தையைத் தாமதப்படுத்த வேண்டும் என்று விரும்பும் பெண்களுக்கும், மெனோபாஸை நெருங்கிக் கொண்டிருப்பதால் அறுவைச் சிகிச்சை தேவையில்லை என்னும் நிலையில் இருக்கும் பெண்களுக்கும் 'காப்பர் டி' (Copper -T) எனப்படும் கருத்தடை சாதனம் கர்ப்பப்பையினுள் பொருத்தப்படுகிறது. இதுவும் மிகவும் நிச்சயமான கருத்தடை முறை. ஒருமுறை பொருத்திக் கொண்டது மூன்று வருடங்களுக்கு இருக்கும். அதற்குப் பிறகு மீண்டும் தேவைப்பட்டால் முதலில் பொருத்தியதை எடுத்துவிட்டு, புதிதாக ஒன்று பொருத்திக் கொள்ளலாம். மிகவும் எளிய முறையில் மயக்க மருந்து கொடுக்காமல், வலி ஏதும் இல்லாமல், புற நோய் சிகிச்சைப் பிரிவிலேயே இதைப் பொருத்த முடியும். அரசாங்க மருத்துவ மனைகளிலும், தனியார் மருத்துவ மனைகளிலும் நாள்தோறும் இச்சாதனத்தைப் பெருமளவில் பொருத்தி வருகின்றனர்.

மேல் நாட்டில் நடந்த ஃபீல்ட் ஸ்டடியின் முடிவுகள், நம் நாட்டிற்குப் பொருந்தாது. அங்கு பெண்கள், புகைபிடிப்பது, போதைப் பொருட்களை உபயோகிப்பது, அடிக்கடி கருச்சிதைவு செய்து கொள்வது போன்றவை மிகவும் சகஜம். இவையும் மலட்டுத் தன்மைக்குக் காரணங்கள் ஆகலாம்.

அளவுக்கதிகமாக குழந்தைகள் பெறுவது, பெண்களின் உடல்நிலையையும், வீட்டுப் பொருளாதாரத்தையும், நாட்டுப் பொருளாதாரத்தையும் பெருமளவில் பாதிக்கும். 'பாதுகாப்பு நாட்கள்' தெரிந்துகொண்டு அப்போது உறவாடும் பக்குவம் எல்லோருக்கும் வருவதில்லை. எனவேதான் IUCD மிகச் சிறந்த தற்காலிகக் கருத்தடை சாதனமாகக் கருதப்படுகிறது.

பத்திரிகை என்பது ஒரு மிகப் பெரிய மீடியம். தங்கள் பத்திரிகையில் வெளியானதைப் படித்து 'காப்பர் – T' பொருத்திக் கொண்டுள்ள பெண்கள் அதை எடுத்துவிட முடிவு செய்திருக்கலாம்; அல்லது பொருத்த வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தவர்கள் தங்கள் எண்ணத்தைமாற்றிக்கொண்டிருக்கலாம். எனவே இந்த விளக்கத்தை

வெளியிட வேண்டுமெனக் கேட்டுக் கொள் கிறோம்.

கடைசியாக ஒன்று: தானும் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள மறுத்து, மனைவியையும் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள அனுமதிக்க மறுக்கும் ஆண்கள் ஏராளம். ஆனால் குழந்தை பிறந்து மனைவியை வீட்டுக்கு அழைத்துச் செல்லும்போது முக்கால்வாசி ஆண்கள் டாக்டரிடம் மறக்காமல் கேட்கும் கேள்வி: 'நான் எப்போது என் மனைவியுடன் நார்மல் Family Life ல் ஈடுபடலாம்?' இந்த மனப்பான்மை இருக்கும்வரை 100% பாதுகாப்பான கருத்தடை சாதனங்கள் மிக, மிக அவசியமாகும். இல்லாவிட்டால், அடிக்கடி அபார்ஷன் செய்து கொள்பவர்களின் சதவிகிதம் மிக அதிகமாகிப் போகும். அதனால் பிற்காலத்தில் விளையக் கூடிய சிக்கல்களை நினைத்துப் பார்க்கும் போது, IUCD பொருத்திக் கொள்வது மிகச் சிறந்த பாதுகாப்பான முறையாகும்.



குமாரி ஜி. ப்ரபாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் மைலாப்பூர் ரசிக ரஞ்சனி சபாவில் மிகவும் விமரிசையாக நடைபெற்றது.

புன்னாகவராளி ராகத்தில் அமைந்த "நாதர் முடிமேல்" என்ற பாடலுக்கு, ப்ரபா ஆடிய விதமும் தொடர்ந்தாற் போல் 20 நிமிடங்கள் சங்கராபரணம் ராகத்தில் ஆடிய வர்ணமும் ரசிக்கும் படியாக இருந்தது.

# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு

களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூகோன்-டி: க்ளூகோஸ், விட்டமின்-டி, கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காபி அல்லது தண்ணீரிலே கலந்து அருந்த, குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்கெட்டுகளில் கிடைக்கிறது. க்ளாக்ஸோ வழங்கும் க்ளூகோன்-டி.




புதிய, அசல்,
வண்ணமயமான
பேக்கைப் பார்த்து
வாங்குவீர்.

## க்ளூகோன்-டி®

ஸூப்பர்ஹீரோ மிகவிரும்பும் சக்திபானம்.

GLL-2389

# அழகே வா



வெங்காயச் சாறைத் தலையில் தேய்த்து ஊறியபின் குளித்தால் பொடுகு சிரங்கு நீங்கி தலைக் குளிர்ச்சி தரும். மத் தண்ணீரைத் தலையில் தேய்த்துக் கொண்டு குளிப்பதால் தலைமயிர் நீண்டு வளரும்.

சுத்தமான தேங்காயெண்ணெயே தலைக்கு நல்லது. கூந்தலுக்கு அடிக்கடி ஸ்ப்ரே போடுவது நல்லதில்லை. கூந்தலை அடிக்கடி சுத்தமான நீரில் கழுவிக் காய விடவேண்டும். கூந்தல் நரைக்காமலிருக்க கருவேப்பிலைத் துவையல், வெங்காயம், கீரை, பசும்பால், பூசணிக்காய் சேர்த்துக் கொள்ளவும்.

காலை வெயிலில் தலையை அவிழ்த்துக் கொண்டு சூரிய வெளிச்சம் படும்படி செய்யவும். தலைக்கு சோப்பு, ஷாம்பு போடுவதைவிட சிகைக்காய்த்தூள் தேய்த்துக்குளிப்பதே நல்லது.

தலைமயிர் நீண்டு வளர சுலபமாக வீட்டில் தயாரிக்கும் தைலம்: ரோஜாப்பூ, செம்பருத்திப்பூ, மருதோன்றி இலை, கடுக்காய், நெல்லி, முள்ளி, ஒரு துண்டு வசம்பு, வெந்தயம் இவைகளை வெயிலில் காய வைத்து ரவைபோல் இடித்துக் கொள்ளவும்.

வாசனைக்குப் பூலாங்கிழங்கு சேர்த்துக் கொள்ளலாம். தேங்காயெண்ணெயில் இந்தக் கலவைப் பொடியைப் போட்டு வெயிலில் நான்கு நாட்கள் காய வைக்கவும். அத்துடன் சுருள் பட்டை என்று மருந்துக்கடையில் விற்கும் அதைச் சேர்த்துக் கொண்டால் சிவப்பு நிறமாகும். இதை மெல்லிய துணியில் வடிக் கட்டி சீசாவில் வைத்துக் கொண்டு உபயோகிக்கவும். கற்பூரத் துண்டத்தை எண்ணெயில் போட்டு வைத்தால் காரல் வாசனை எடுக்காது.

முகம் பளபளப்பாக இருக்க அதிகமான காஸ்மாடிக்ஸ் உபயோகிக்காமல் இருப்பது நல்லது. கூடிய மட்டும் பௌடர், ஸ்னோ போடுவதைத் தவிர்க்கவும். முகம் இளமையாக இருக்க விளக்கெண்ணெய் உபயோகிப்பது நல்லது. பலருக்கு இது அருவருப்பாகப் படலாம். ஆனாலும் இப்போது கடைகளில் நல்ல விளக்கெண்ணெய் மலிவாகக் கிடைப்பதால் உபயோகிப்பது சுலபம்.

படுக்குமுன் விளக்கெண்ணெயை விரலில் தோய்த்து முகத்தில் பரவலாகத் தடவவும். ஒருமெல்லியதுணியால்முகத்தைத் துடைத்து அழுக்கை நீக்கிவிடவும். மறுபடியும் கொஞ்சம் விளக்கெண்ணெயைக் கண்ணுக்குள் படாமல் முகத்தில் மேல் நோக்கி மெதுவாக மாலிஷ் செய்யவும். கண்ணைச் சுற்றிக் கருவளையமிருந்தால் கொஞ்சம் அதிகமாகவே உபயோகிக்கவும். படுக்கை மீது ஒரு பழைய துணியைப் போட்டுக் கொண்டு படுத்தால் கறை படாது. காலை சீக்கிரம் எழுந்துவிடுங்கள்.

மைதாமாவைக் கொஞ்சம் பாலுடனோ மோருடனோ எலுமிச்சம்பழச் சாறுடனோ கலந்து பேஸ்ட் மாதிரி செய்து கொண்டு கழுத்து, கன்னம், நெற்றி, முகவாய் கட்டை முதலிய இடங்களில் அப்பிவிடவும். கண்களுக்குள் படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். சற்று நேரத்தில் காய்ந்து வாயைத் திறக்க முடியாமல் சுருக்கம் சுருக்கமாக அதிகோரமாகக் காட்சியளிக்கும். கண்ணாடியில் பார்த்துக்கொண்டால்மறுநாள் சிகிச்சையை விட்டுவிடுவீர்கள்.

வாயைச் சாப்பிடுவது போல் அசைக்கவும். கண்களை மேல் நோக்கி, கீழ்நோக்கிப் பார்க்கவும் — உருட்டி விழிக்கவும். பத்து நிமிடங்கள் கழித்துப் பச்சைத் தண்ணீரால் கழுவிவிடவும்.கழுவுவதுகஷ்டம். அடையாக மாவு ஒட்டிக் கொண்டிருக்கும். ஊற வைத்தே அலம்ப வேண்டும். அழுத்தித் தேய்க்கக் கூடாது. நன்றாக அலம்பிவிட்டுத் துணியால் துடைத்துவிட்டு பாலாடையோ, கிளிஸரீனோ கொஞ்சம் போல் தடவிக் கொள்ளவும்.

குளிக்குமுன் ஒரு ஸ்பூன் கசகசா கஸ்தூரி மஞ்சள் இவைகளை விழுதாக அரைத்துக்

# உபவாச பயன்

தானம் செய்யச் சக்தியில்லாதவர்கள் விரதங்களினால் புண்ணியத்தை அடையலாம் எப்படி?

## விரதம் அனுஷ்டிக்கும் முறை

| மாதம் | | பலன் |
|---|---|---|
| 1. மார்கழி | ஒருவேளை உணவு அருந்தி சிவனை குறித்து விரதம் இருந்தவன் | இந்திர லோகத்தை அடைவான். |
| 2. தை | வேதாகமாதிகளை பாராயணம் செய்தவன் | ஞானியாவான். |
| 3. மாசி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | உத்தம பெண்களை அடைவான். |
| 4. சித்திரை | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | உயர்குலப் பிறப்பையும் தனத்தையும் அடைவான். |
| 5. வைகாசி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | எல்லோராலும் போற்றி வணங்கப்படுதல் |
| 6. ஆனி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | அரசர்கள் அனைவரிலும் மேம்பாட்டையும் |
| 7. ஆடி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | இஷ்டசித்திகளையும் |
| 8. ஆவணி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | சௌபாக்கியத்தையும் வலிமையையும். |
| 9. புரட்டாசி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | நவரத்தினங்களையும் |
| 10. ஐப்பசி | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | வாணிப லாபத்தையும். |
| 11. கார்த்திகை | ஒரு வேளை புசித்து விரதம் இருந்தவன் | அசுவமேத பயனையும் அடைவார்கள். |

ஒரு வருஷம், ஒரு வேளை உணவுடன் விரதம் மேற்கொண்டவன் சூரியனுக்குச் சமமான விமானத்தில் ஏறி, எல்லா உலகங்களிலும் சஞ்சரித்து, சக்கரவர்த்தியாகத் தோன்றி, பற்பல சிவாலயங்களை நிர்மாணஞ் செய்வான். (சிவ மஹா புராணம்)

விரதத்தினால் பயன் அடைந்தவர்கள் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

இனிப்பு வகைகள்: அதிரசம், ஸ்வீட் சோமாஸ், பொறிவிளங்காய் உருண்டை, குங்குமப்பூ ஹல்வா, குங்குமப்பூ பாதாம் ஹல்வா, குங்குமப்பூ ஜாங்கிரி, குங்குமப்பூ லட்டு, தேங்காய்ப் போளி, மங்களூர் போளி, வெல்லச் சீடை, பாதாம் கதளி, பாம்பே காஜா, தேங்காய் கோவா, வேர்க்கடலை உருண்டை, மாலாடு, ரஸமலாய், ரவா லட்டு, ரஸகுல்லா, சோன்பப்டி கேக்.

கொஞ்சம் பயத்த மாவுடன் கலந்து தேய்த்துக் கொள்ளவும். உடம்பு முழுவதும் தேய்த்துக் குளிக்கலாம். இப்படி ஒரு ஆறு மாதங்கள் செய்து பாருங்கள்.

இன்னொரு விஷயம்: தினம் ஒரு வெங்காயத்தை நறுக்கித் தயிரில் கலந்து சாப்பிடு முன் உட்கொள்ளவும். கந்தகச் சத்து சருமத்துக்கு நல்லது.

சருமம் வெளுக்க வேண்டுமானால் உப்பு, காரம் குறைக்கவும். எண்ணெய்ப் பொருளை விலக்கவும். மஞ்சள் பொடி கலந்த நீரைக் குடிக்கவும். எட்டு டம்ளர் தண்ணீர் குடிக்கவும். வேப்பிலை போட்டுக் காய்ச்சிய நீரில் குளிக்கவும். காலையில் எலுமிச்சம்பழத்தை நீரில் கலந்து உப்பு, சர்க்கரை போடாமல் குடிக்கவும். கட்டாயம் பலன் கிடைக்கும்.

**உதடு சிவக்க:**

நிறையத் தண்ணீர் குடிக்க வேண்டும். பச்சையாக நிறையக் கறிகாய்கள் சாப்பிடவும். படுக்குமுன் கிளிஸரினால் உதடுகளுக்கு மாலிஷ் செய்யவும்.

**பற்கள் வெளுக்க:**

வாரத்துக்கொருமுறை எலுமிச்சம்பழச் சாற்றில் உப்பைக் கலந்து தேய்க்கவும். வெங்காயத்தைக்கடித்து அதன் சாறு கொஞ்ச நேரம் பல்லில் படும்படி வைத்திருந்து வாய் கொப்புளிக்கவும். சாக்லேட், இனிப்புப் பண்டங்களைச் சாப்பிட்டால் பற்கள் கறைபட்டுவிடும். பற்களை நல்ல பிரஷ்ஷினால் தினம் இரண்டு முறையாவது தேய்க்கவும்.

கண்கள் பளபளப்புடன் ஒளியுடன் இருக்க: பிடித்தால் இரவு ஒரு ஸ்பூன் காட் லிவர் ஆயில் சாப்பிடுங்கள். பிடிக்காவிட்டால் காலை வெறும் வயிற்றில் சுண்டைக் காயளவு கருவேப்பிலையை அரைத்துப்பச்சையாக விழுங்குங்கள். கண்கள் பாதுகாப்புக்கு நிறைய வெண்ணெய், கருவேப்பிலை, கொத்து மல்லி, கீரை, புதினா, பால் இவைகளைச் சேர்த்துக் கொள்ளவும். இலையைக் கொதிக்க வைத்து அந்தத் தண்ணீரை வடிக்கட்டி ஒரு துணியில் நனைத்து கண்ணை த் திறந்து கொண்டு அந்தத் துணியைக் கண்களின் மீது பத்து நிமிடங்கள் போட்டு வைக்கவும். அதே மாதிரி பன்னீராலும் செய்யலாம். கண்களை அகலத் திறந்து கொண்டு பச்சைத் தண்ணீரை வேகமாக அடித்துக் கொள்ளவும். காலைச் சூரியனை ஐந்து நிமிடங்கள் பார்க்கவும். சூரிய நமஸ்காரம் முடிந்தவர்கள் செய்யலாம்.

கண்கள் கெடாமலிருக்க இருட்டில் எழுதுவது, இரவில் கண்விழிப்பது, பகல் காட்சிகள் பார்ப்பது இவைகளைத் தவிர்க்க வேண்டும். குறித்த நேரத்தில் எழுந்து குறித்த நேரத்தில் சாப்பிட வேண்டும்.

எல். ஆர். லக்ஷ்மி.



## தாய்ப்பால் ஊட்டுவது உங்களது குழந்தைக்கு ஆகாரச்சத்தைவிட அதிக சத்தை அளிக்கிறது. குழந்தைக்கு உணர்ச்சி பூர்வ பாதுகாப்பையும் தருகிறது.

தாய்ப்பால் ஊட்டுவது தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள பாசப் பிணைப்பை நேச உணர்வை மேலும் வலுவாக்குகிறது. ஆம்! இயற்கையாகவே தாய் அன்பை வெளிப்படுத்தும் வழியே இதுதான். அதனால் குழந்தை மன நலத்தோடும் மகிழ்வோடும் வளர்கிறது.

தாய்ப்பால் குழந்தைக்கு ஏற்ற சரிவிகித உணவாகும். அதில் குழந்தைக்கு தேவையான புரதச்சத்துக்கள் அனைத்தும் தேவையான விகிதத்தில் அடங்கியுள்ளது.



தாய்ப்பால் ஊட்ட தவறாதீர்கள். இயற்கையின் நியதி அது. உங்கள் குழந்தையின் விருப்பமும் அதுவேதான். தவிர்க்க முடியாத காரணங்களால் தாயின் உடல் நலம் பாதிக்கப் பட்டாலோ அல்லது தாய்ப்பால் குறைந்து விட்டாலோ—விஜயா ஸ்ப்ரே பயன்படுத்துங்கள். பரிசோதிக்கப்பட்ட மற்றும் நம்பகமான குழந்தை உணவு.

விஜயா ஸ்ப்ரே அடைக்கப்பட்டுள்ள டின்களில் உங்கள் குழந்தைகளின் உடல் நலம் காக்கும் ஆலோசனைகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றை கவனத்தில் கொண்டு குழந்தையின் உடல் நலத்தை பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

குழந்தைகளின் நலனில் அக்கறை கொண்டு வெளியிட்டோர்:
விஜயா ஸ்ப்ரே தயாரிக்கும் ஆந்திர பிரதேஷ் டெய்ரி டெவலப்மெண்ட்
கோ ஆப்பரேடிவ் பெடரேஷன் லிமிடெட்.

AKSHARA 227 86 APD (Tam)

# எந்த முகம் சொந்த முகம்?




உங்கள் முகம் எந்த வடிவத்தில் இருக்கிறது! உங்கள் முக வடிவத்துக்குத் தக்க குணாதிசயங்கள் இதோ!







1. **நீண்ட முகம்:** நீண்ட முகத்தோடு தோற்றமளிப்பவர்கள் அதிகப் புத்திசாலிகளாக இருப்பார்கள். ஆனால் பொது அறிவு இவர்களிடத்தில் இருக்காது. கற்பனைத் திறன் உள்ளவர்களாக இருப்பார்கள். கதை விடுவதில் விருப்பம் உள்ளவர்கள்.

2. **நீண்ட வட்ட முகம்:** நீண்ட வட்ட முகத்தை உடையவர்கள் ஞானம் உள்ளவர்கள். எப்போதும் சிந்தனை செய்து கொண்டே இருப்பார்கள். சிறந்த சாமர்த்தியசாலிகள் இவர்கள்.




3. **நீண்ட சதுர முகம்:** நீண்ட சதுர முகத்தைக் கொண்டவர்கள் எந்தக் காரியத்திலும் உறுதியுடன் இருப்பார்கள். ஒரு காரியத்தை எடுத்தால் அதை முடிக்காமல் விட மாட்டார்கள். பின்வாங்கவும் மாட்டார்கள்.

4. **முக்கோண முகம்:** இந்த முக்கோண முகத்தைக் கொண்டவர்கள், எந்தக் காரியத்திலும் துணிச்சலாக இறங்குவார்கள். பிரயாணம் செய்வதை அதிகமாக விரும்புவார்கள்.

5. **சதுர முகம்:** இந்த முகத்தை உடையவர்கள் அதிக சக்தி கொண்டவர்கள். இவர்கள் குடும்பம் நடத்துவதில் மிகவும் திறமைசாலிகள். குடும்பத்தை அன்புடன் நடத்திச் செல்வார்கள். இந்த முகத்தைக் கொண்டவர்களுக்குக் குழந்தை குட்டிகளுக்குப் பஞ்சமில்லை.







6. **வட்ட முகம்:** இந்த முகத்தைக் கொண்டவர்கள் எப்போதும் சந்தோஷமாக இருப்பார்கள். நல்ல இடகாத்திரம் நிறைந்தவர்கள் இவர்கள். நல்ல வசதிகளுடனும் தம் வாழ்க்கையை நடத்துவார்கள். நீண்ட நாட்கள் உயிர் வாழ்வார்கள்.

— ப்ரியா பானு.

# தமிழ்ப் புத்தாண்டு முதல்

# பாண்டி பஜாரில் மாயா பஜார்

# ஹனீபா
## டெக்ஸ்டைல்ஸ்

மாயா பஜாரில் கிடைப்பது போல் பாண்டி பஜாரில் உள்ள ஹனீபா டெக்ஸ்டைல்ஸில் தமிழ்ப் புத்தாண்டு முதல், இந்திய திரு-நாட்டில் உள்ள எல்லா மில்களில் தயா-ராகும் வண்ண வண்ண துணிகள், அனைத்து வகையான பட்டுப் புடவைகள் ஆகியவைகள் அயல் நாடுகளில் குவிக்கப் பட்டுள்ளது போல் பிரமிக்கும் வகையில் குவிக்கப்பட்டுள்ள ஒரே இடம்

**ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்**



14, சர் தியாகராயா ரோடு, பாண்டி பஜார்
சென்னை-600 017

national/HT 1359



# கொஞ்சம் கேரளாப் பக்கம் போன போது

எர்ணாகுளம் விருந்தினர் மாளிகை. சுற்றுலா வழிகாட்டி பஷீர், ''ஸாரே! இன்று சாயரட்சை கதகளி கொச்சி கல்சுரல் செண்டரிலே! ஒண்ணாங்கிளாஸாயிருக்கும்!'' என்று சொன்ன போது உடனே புறப்பட்டுவிட்டேன்.

''கேரளத்தின் பூர்விகக் கலை கதகளி எப்படி உதயமாயிற்று?'' என்று கலா மண்டலம் வாசுதேவன் நாயரிடம் கேட்டேன்.

''குருவாயூர் கோயிலில் கிருஷ்ணன் ஆட்டம் ரொம்பப் பிரசித்தமானது. கேரளத்தின் வடக்குப் பகுதிகளில் கிருஷ்ணன் ஆட்டம் பிராபல்யமாகியிருப்பதை உணர்ந்த கொட்டாரக் கரை தம்பிரான் அந்தக் கலை விற்பன்னரான சாமுத்ரியைத் தம் அரண்மனையில் நடித்துக் காட்ட அழைத்தான். சாமுத்ரி அரண்மனைக்கு வந்து ஆடிக் காட்ட மறுத்துவிட்டார்!

சாமுத்ரியின் அலட்சியத்தைக் கண்டு சினமுற்ற கொட்டாரக்கரை தம்பிரான் ஒரு புதிய ஆட்டத்தைத் தோற்றுவிக்க உடனே முயன்றார். புதிய வடிவம் ராமன் ஆட்டம் பிறந்து. அதுவே பிற்காலத்தில் கதகளிக்கு வடிவம் கொடுத்தது. இந்தச் சம்பவம் நடந்தது நானூறு ஆண்டுகளுக்கு முன்பு!

கதகளியில் பல்வகை முக வெளிப்பாடுகள் உண்டு. கதகளி, நடன நாடகம், சங்கீதம் அனைத்தும் பெற்று, பரதநாட்டியம் போல் முக பாவங்களும் முத்திரைகளும் கொண்டது. கதகளியில் முக்கிய அங்கம் கண்தான்! கண்கள், தசைகள், கன்னம், எத்தனை எத்தனை ரஸங்களைத் தருகின்றன!'' உணர்ச்சியோடு விவரித்துக்கொண்டு போனார் கலா மண்டலம் வாசுதேவன் நாயர்.

''கதகளியைக் கற்றுக் கொள்ள விரும்பும் சாதகன் எத்தனை வருஷங்கள் செலவிட வேண்டியிருக்கும்?''

''கதகளி மாணவன் ஆறு வருஷங்கள் பயிற்சி பெற வேண்டும். இரண்டு வருஷங்கள் 'போஸ்ட் கிராஜுவேட்' பயிற்சியில் கலந்து கொள்ள வேண்டும். மேலும் இரண்டு வருஷங்கள் ஸ்காலர்ஷிப்போடு பயிலலாம். முற்காலத்தில் கதகளியைக் குருவிடமிருந்து சிஷ்யன் கற்று அவரது விருப்பப்படிதான் தேர்ச்சி பெற முடியும்!''

''ஸாரே! கதகளியில் பெண்கள் கற்றுக் கொண்டு ஆடுவது ரொம்ப அபூர்வம். அந்த அபூர்வக் கலையில் சசிகலா முறைப்படி பயின்று தேர்ச்சி பெற்றிருக்கிறாள். இவளது சகோதரன் சரத்குமாரும் கதகளி விற்பன்னர்!'' என்று அறிமுகப்படுத்தி வைக்கிறார் 'கைடு' பஷீர்.

''பெண்கள் கதகளியில் பங்கேற்க மாட்டார்களே, உங்களுக்கு எப்படி இந்தக் கலையில் ஆர்வம் ஏற்பட்டது?''

''நான் எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த காலத்திலிருந்து கதகளியை விருப்பத்துடன் பயின்று வருகிறேன். எனது குரு கலா மண்டலம் ஈ. வாசுதேவன். இன்று பல பெண்கள் கதகளியில் ஈடுபட்டிருக்கிறார்கள். திருப்பணித்துறையில் ராதிகாவர்மா ஒரு கதகளி பெண் குழுவினையே நிர்வகித்து வருகிறார். செங்கனூரில் பல அக்கரைச் சீமைப் பெண்கள் கதகளி பயின்று வருகிறார்கள்!'' என்று விவரிக்கிறார் சசிகலா.

சசிகலா கேரள கலா மண்டலம் முன்னாள் பிரின்ஸிபால் ராமன் குட்டி நாயரிடம் முறைப்படி கதகளியைப் பயின்றிருக்கிறார். கோட்டயம் காந்திஜி கல்லூரியில் இளைஞர் திருவிழாவில் கதகளிக்கு முதல் பரிசு சசிகலாவுக்குக் கிடைத்தது. சசிகலா பாரத ராஷ்டிரபதி ஜெயில்ஸிங் முன்னிலையில் கதகளி ஆடிப் பாராட்டும் பெற்றிருக்கிறார். க்யூபா, ஹவானா, ரஷ்யா, கஸாப்ளாங்கா போன்ற நாடுகளுக்குச் சென்று 'உலக இளைஞர்கள் திருவிழா'வில் தம் கதகளித் திறமையை வெளிப்படுத்தியிருக்கிறார்.

எர்ணாகுளம் கல்சுரல் ஆர்ட் செண்டரில் தினம் ஒன்றரை மணி நேரம் கதகளி நாட்டிய நாடகம் நடைபெறுகிறது. அன்னிய நாடுகளிலிருந்து வரும் சுற்றுலாப் பயணிகள் ஆவலுடன் கதகளியைக் காணுவதோடு, பல காட்சிகளையும் 'கிளிக்' செய்து கொள்கிறார்கள்.

—பி. எஸ். எம்.



# சொல்ல

* "அன்பிற் சிறந்த தவமில்லை" மிகவும் சிறந்த கதை. அகிலாவைப் போல் ஆயிரத்தில் ஒருத்தர் எங்கோ வாழ்கிறார்கள். கதையைப் படைத்த ஷைலஜாவிற்கு பாராட்டுக்கள். வாத்ஸல்யமான நட்புக்குத் தாழ்வில்லை என்பதற்கு வித்யாவும், அகிலாவும் சான்று.

சௌ. சுசீலா, மன்னார்குடி.

* மறைந்த நடன மாமேதை ருக்மிணிதேவியின் புகைப்படங்களை அருமையான முறையில் தொகுத்து நம்மை நெகிழச் செய்துவிட்டார் ஆனந்தி.

உமார்த்தி, கோவை.

* சச்சு ராம்கிஷன் எழுதிய 'ஜிங்னு செய்தோம்' படித்து வீட்டில் யாவரும் கொல்லென்று சிரித்தோம்.

சி. எல். ராகவேந்திரன், வளவனூர்.

* என். பத்மாவாக இருந்து எத்தனை பேர் அவஸ்தைப்படுகிறார்களோ? குடும்பம்பிரியக் கூடாது. மகன் வேதனையடையக் கூடாது என மனத்தை ஏமாற்றுவது ஊழல்தானே? என். பத்மாவாக இருந்து துடித்தேன்.

குமாரி சீதாலட்சுமி, நாகர்கோவில்.

* ஆண்கள் பகுதியில் வெளியிட்ட 'நாங்கள் என்ன எதிர்பார்க்கிறோம்' 'அன்பைத்தான்' என நால்வரும் குறிப்பிட்டுள்ளது மிகவும் அருமை. பாராட்டுக்கள். (தொகுத்த ஆசிரியருக்கு.)

சீனி. மகாலிங்கம், வலங்கைமான், தஞ்சை.

* நடுத்தர வயதுப் பெண்களின் (மத்தியதர வகுப்பு) மனத்தை அறிந்து "உங்களுக்கு போரடிக்கிறதா?" எனக் கேட்டு, அதற்கான தீர்வுகளைக் கூறிய கிரிஜா மகாதேவனின் கட்டுரை என்னை மிகவும் கவர்ந்துவிட்டது. மனச்சலிப்பினைத் தீர்க்க மருந்தாக உபயோகப்பட்டது.

என். சித்தாலட்சுமி, விழுப்புரம்.

* என்னய்யா இது? போன இதழில் ஒல்லியாயிருப்பதைக் குறை கூறினீர். இந்த இதழில் எடைப் பிரச்னைக்கு விடை தேடச் சொல்றீர். உமது பேச்சைக் கேட்டால் உருப்பட்டாற் போலத்தான்.

எம். தியாகராஜன், சென்னை—28.

* என்னென்ன பொருள் எதில் எதில் கலக்கப்படுகிறது. அதன் விளைவு என்ன என்பதைப் பட்டியலிட்டுக் காட்டியிருந்த விதம் அருமை. பயனுள்ள கட்டுரை.

திருமதி எம். சித்தாமணி, சிதம்பரம்.

* 'ராஜி' எழுதியுள்ள கலப்படம் பற்றிய கட்டுரையைப் படித்து அதிர்ச்சியும், வேதனையும் அடைந்தேன். ஒன்றுமறியா பாமர, ஏழை, எளிய மக்களின் பொருளாதார நெருக்கடியைப் பயன்படுத்திக் கொண்டு குறைந்த விலையில், கலப்படம் செய்து தரக்குறைவான பொருட்களை சப்ளை செய்யும் வியாபாரிகளை நினைக்கும்போது நெஞ்சு குமுறுகிறது. மக்களின் விழிப்புணர்ச்சியைத் தட்டி எழுப்பக் கூடியதாகக் கட்டுரை அமைந்திருந்தது.

எஸ். ராஜுகோபால், திருச்சி—16.

* "சகோதரி சித்ரா கூறியுள்ளபடியே கலப்படமில்லாத ரோஜா போனி தயாரித்தால் கூட அது, அவரது எழுத்தில் இருக்கும் சுவைக்கு ஈடாகுமா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. காலையிலிருந்து சரியான மூடில் இல்லாத என்னை அந்த எழுத்து தன்னை மறந்து சிரிக்க வைத்துவிட்டது. அவருக்கு என் நன்றி."

ரேவதி பாலு, சென்னை—95.

அட்டை வண்ணப்படம்: **யோகா.**

# விரும்புகிறோம்





# நல்ல ஆளுமை ஒரு காமதேனு



நுண்ணறிவு, ஆக்கத்திறன், நினைவு ஆற்றல் ஆகியவற்றில் நாம் வேறுபடுகிறோம். அதுவும் பிறப்பின்போதே ஏற்றத் தாழ்வுடன் பிறக்கிறோம். இந்த ஆற்றல்களை 20%க்கு மேல் உயர்த்துவதென்பது இயலாத காரியம்.

ஞாபக சக்தியை வளர்த்துக் கொள்வதெப்படி? என்று பல கட்டுரைகளைப் பார்த்திருப்பீர்கள். அடிப்படை ஞாபக சக்தியை வளர்ப்பதற்கு அவை வழி சொல்ல முடியாது. உங்களுக்கு இருக்கும் ஞாபக சக்தியை எவ்வாறு பெருமளவு பயன்படுத்த முடியும் என்பதற்குத்தான் வழிமுறைகள் உள்ளன.

இதேபோன்று ஒரு குழந்தை 50 சதவீத நுண்ணறிவுடன் பிறந்தால், இந்த ஐம்பதினை எவ்வளவு தூரம் முழுமையாகப் பயன்படுத்த முடியும் என்பதுதான் சாதனை. சாதாரண நுண்ணறிவு ஆக்கத் திறன், ஞாபக சக்தியுடன் படைக்கப்பட்ட மனிதர்கள் கூட உலகில் வியத்தகு சாதனை படைத்திருக்கின்றனர்! எப்படி?

ஒரு மனிதன் வாழ்க்கையில் முன்னேறி, உலகம் போற்றும் உத்தமனாகச் சரித்திரம் படைப்பதற்கு அவனது ஆளுமையே காரணம். நல்ல குடும்பத் தலைவி இருக்கும் குடும்பத்தில் இல்லாதது என்று எதுவும் இல்லை. அதேபோன்று நல்ல ஆளுமை படைத்தவருக்கு அதுவே எல்லாச் செல்வங்களுக்கும் அடிப்படை.

நல்ல ஆளுமை படைத்தோரே! உங்களுக்குத் தலைவணங்குகிறோம், நீங்கள்தான் கடவுளுக்கு அடுத்தபடி. உங்களுடைய பெருமிதமும், தன்னம்பிக்கையும், பிறருக்காக வாழும் பெருநோக்கும் எங்களுக்கு வழிகாட்டட்டும், நாங்களும் புத்தொளி பெறுகிறோம், நல்ல ஆளுமை பெறுகிறோம்.'

**உண்மை அனுபவங்கள்:** அதிக நுண்ணறிவு, ஆக்கத்திறன், ஞாபக சக்தி படைத்த இருவரை எடுத்துக் கொள்வோம். இருவரும் ஆற்றலில் மேதைகள். ஒருவரை காந்தி என்போம். மற்றவரை ஹிட்லர் என்று பெயர் சூட்டுவோம். ஒரே அளவு நுண்ணறிவு, ஆக்கத்திறன், ஞாபக சக்தி கொண்ட இருவரில் காந்தி உலகம் போற்றும் உத்தமராகி 'மகாத்மா' ஆனார். மற்றவர் உலகம் தூற்றும் சர்வாதிகாரியாகச் சரித்திரத்தில் இடம் பெற்றார்.

இந்த வேற்றுமை அவர்கள் இருவரது ஆளுமை வேறுபாட்டால் நிகழ்ந்ததுதான். கொடிய கொலையாளிகளும், பயங்கரவாதிகளும் உருவாவது மோசமான ஆளுமையினால்தான். ஆளுமை அழகான சொல். தன்னை ஆளுகின்ற தன்மை, பிறரை ஆளுகின்ற தன்மை என்று மிகுந்த கருத்துச் செறிவு கொண்ட சொல். புத்தரும், ஏசுவும், நபியும் ஒப்பிட முடியாத ஆளுமை பெற்றிருந்தார்கள்.

கடவுள் உங்கள் முன் தோன்றி, "ஒரே ஒரு வரம் தருவேன், என்ன வரம் வேண்டும்? என்று கேட்டால், அளப்பரிய செல்வம் வேண்டும் என்று கேட்காதீர், "மிகச் சிறந்த



டாக்டர் கே. வி. காழியப்பன்.

ஒப்பிட முடியாத ஆளுமை வேண்டும்.'' என்று கேளுங்கள். நல்ல ஆளுமை பெற்றவர்கள் பிறப்பின் பயன் பெற்றவர்கள்.

நுண்ணறிவு, ஆக்கத் திறன், ஞாபக சக்தி ஆகியவை 80%. பிறப்பிலேயே நிர்ணயிக்கப் படுகின்றன. ஆனால் 20% ஆளுமை பிறப்பிலும், 80% ஆளுமை சூழ்நிலையாலும் நிர்ணயிக்கப்படுகிறது. எனவே ஆளுமையைநாளும் நீங்கள் வளர்த்துக் கொள்ளலாம். இது உங்கள் கையில்தான்.

ஆளுமையை நல்ல ஆளுமையாக்க வழி சொல்லுவதுதான் மனோதத்துவம் — உளவியல். உளவியல் படிக்காமலேயே உளவியல் கருத்துக்களை வாழ்க்கையில் பயன்படுத்தித் தமது ஆளுமையை வளர்த்து, முன்னேறியோர் மிகப் பலர். எனவேதான் படித்தவரெல்லாம் அறிவுடையோர் என்று சொல்ல முடியாது. இதேபோன்று உளவியல் படித்தவரெல்லாம் உளவியல் அறிஞர் ஆகார்.

ஆளுமை மிக நுண்மையானது. ஆளுமையினை எளிதில் அளவிடுதலும் எளிதல்ல. கயவர் கூடத் தமது ஆளுமையை மற்றவர் விரும்பத் தகுந்த ஆளுமையாக வெளிக் காட்டுவர். நெருக்கடி நேரம் ஒன்றில்தான் அவர்கள் கயமை ஆளுமை வெளிப்படும்.

மேலாளர், இயக்குநர் போன்ற பதவிகளுக்குத் தகுந்த ஆளுமைக் கூறுகள் உடையோரைத் தேர்ந்தெடுக்க நேர்முகத் தேர்வுகள் நிறைய நடத்துகிறோம். ஆனால் பெரும்பான்மையான நேர்முகத் தேர்வுகளில் ஆளுமையை எடைபோடக் கூடிய கேள்விகள் கேட்கப்படுவதில்லை. பொது அறிவையோ, ஞாபக சக்தியையோ சோதிப்பதாகத்தான் கேள்விகள் அமைந்துவிடுகின்றன. சேவை மனப்பான்மையே இல்லாத ஆளுமை படைத்த ஒருவரைச் சமூக சேவையின் இயக்குநராகத் தேர்ந்தெடுத்தால் அவர் சமூக சேவை, ''சேவை, என்ன விலை?'' என்றல்லவா கேள்வி கேட்பார்?

பொது அறிவினைச் சோதிக்கும் நேர்முகத் தேர்வினைக் கேலி செய்யும் ஒரு நிகழ்ச்சி: ஒரு நண்பர் தேர்வாளைக் குழு நடத்திய நேர்முகத் தேர்வு ஒன்றிற்குச் சென்றார். அங்கு தேர்வாளைக் குழு உறுப்பினர் ஒருவர், ''தாஜ்மஹால் எங்கு இருக்கிறது என்று கேள்வி கேட்டார். நண்பர் தாஜ்மஹால் மதுரையில் இருக்கிறது என்று பதிலளித்தார். அனைவரும்சிரித்தனர். நண்பரும்சிரித்து விட்டு, ''ஏன் சிரிக்கிறீர்கள்? தாஜ்மஹால் ஆக்ராவில் இருக்கிறது என்று கூறினால் எனக்கு இந்த வேலையைக் கொடுத்து விடுவீர்களா என்ன?'' என்று வினவினார். இதே போன்றுதான் பல நேர்முகத் தேர்வுகள் நடைபெறுகின்றன.

நேர்முகத் தேர்வின் குறிக்கோளே ஆளுமையை அளவிடுவது என்பதனை என்றோ மறந்துவிட்டோம். அல்லது மறந்துவிட்டது போல்நடிக்கிறோம். நுண்ணறிவுக்கும், ஞாபக சக்திக்கும் முதலிடம் தருவதைத் தவிர்த்து ஆளுமைக்கு முதலிடம் தருதல் வேண்டும். நல்ல ஆளுமை இல்லாத ஆனால் திறமை படைத்த தலைவர்கள் உலகத்தையே துன்பக் கடலில் ஆழ்த்தியதை நாம் அறிவோம்.

எனவே வாய் தவறியும் உங்கள் குழந்தைகளை 'உதவாக் கரை' என்று சொல்லாதீர்கள். நீங்கள் கோடி, கோடியாகப் பணத்தைச் சேமித்து வைத்தாலும் புண்ணியமில்லை. உங்கள் குழந்தைகள் தன்னம்பிக்கை கொண்ட ஆளுமையினராக வளரட்டும். நல்ல ஆளுமை ஒரு கற்பகத் தரு: அது அனைத்தும் நல்கும்.



சேற்றுப் புண்ணுக்கு கைதேர்ந்த மருந்து

நீண்டபல ஆண்டுகளாகச் சேற்றுப் புண்ணால் அவதிப்பட்டு வந்தேன். அதுவும் மழைக் காலத்தில் மிக அதிக வலியுடனும் எரிச்சலுடனும்கஷ்டப்பட்டுகொண்டிருந்தேன். இதற்கு டாக்டரிடம் வைத்தியம் பார்த்தும், பல புத்தகங்களில் வரும் வைத்திய முறையையும் கடைபிடித்தேன். நான் கண்டது ஏமாற்றமே. ஒரு நாள் அதிகஎரிச்சல்காரணமாக, தற்செயலாக, பாம் ஆயில் என் கண்ணில் பட்டது. அதை உபயோகித்தேன். எரிச்சல் உடனே அடங்கியது மட்டுமின்றி இரண்டு நாட்களில் பூரணமாக குணமேற்பட்டது. இப்பொழுது பெய்த மழையில் சேற்றுப் புண்ணே வரவில்லை.

— வி. ஜி. புவனேஸ்வரி.

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.






GLL-6808

## நைஸில் உபயோகியுங்கள்

**வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.**

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ தனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது. 2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. 4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**




# காதல் ஒன்றும்

"சிறுகதை என்னும் சமுத்திரத்தில் ஆழ்ந்து மூழ்கி பரிவு, அன்பு, க்ஷேமம், தன்னில் பிறர், பிறரில் தான் என்று கொண்டு வருகிறான் மாலன்"— என்று தி. ஜானகிராமனால் பாராட்டப்பட்ட ஒரு வித்தியாசமான எழுத்தாளர் திரு மாலன். தீர்மானமாக ஒரு பிரச்னையை எடுத்துக் கொண்டு கதை சொல்ல வரும் இவர் தனக்கென்று எந்தப் பாணியும் வைத்துக் கொள்ளவில்லை.

எப்படி நீங்க இந்த எழுத்துத் துறைக்கு வந்தீங்கன்னு சொல்ல முடியுமா?

மாலன்: நான் தமிழ்ச் சிறுகதைகள் எழுத ஆரம்பித்தது ஒரு விபத்து மாதிரிதான். இந்தியாவுக்காக விளையாடும் கிரிக்கெட் அணியில் ஒருவனாக இருக்க வேண்டும் என்பதுதான் என் இளமைக்கால லட்சியமாக இருந்தது. அது நிறைவேறவில்லை. எழுத்துத் துறைக்கு வந்தேன். ஆனால் When God Closes One Door, He Opens Another என்று தெரிஞ்சுக்கிட்டேன்.

இப்போதெல்லாம் பத்திரிகைகளுக்குத் தகுந்தாற்போல எழுதுகிறார்களே? எழுதறதுக்கு முன்னாலே என்ன எழுதுவது, எந்தப் பத்திரிகைக்கு எழுதுவது என்று நீங்களும் தீர்மானித்துக் கொள்வீர்களா?

மா: என்னுடைய கதைகள் முதலில் மாலனின் கதைகள். பத்திரிகைக்குத் தகுந்தாற்போல நான் கதைகள் எழுதுவதில்லை. ஒரு கதை எழுதுவதற்கு முன்னால் சில முடிவுகளை நான் எடுத்துக்கறேன். ஒவ்வொரு கதையிலும் ஒரு சின்னக் கருவை வைத்துக் கடைசியிலே ஒரு நீதி சொல்றேன்.

கதை சொல்லும் போது நீங்க ரொம்பவும் நேரடியாக சொல்வது போலத் தெரிகிறதே!

மா: ஆமாம். அலங்காரமான வார்த்தை ஜாலத்துல எனக்கு நம்பிக்கையில்லே. எழுத்துல ஒரு செய்தி இருக்கணும். அது போய் ஏதாவது சாதிக்கணும். அப்படித்தான் "ஆயுதம்"ங்கற பாரதி சிறுகதை எழுதினேன். அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது.

நீங்க ஏன் சிறுகதைகளை எழுதறீங்க? தொடர் கதை எழுதறதில்லையே!

மா: என்னுடைய பலம், பலமின்மை எல்லாம் எனக்குத்தானே தெரியும்! என்னாலே தொடர்கதை எழுத முடியும். ஆனா, தொடர் கதையில், சொல்ல வர்ற விஷயம் தொலைந்து போயிடுங்கறது என் அபிப்பிராயம். இருபத்



# பெரிய விஷயமில்லை

தைந்து வாரம் எழுதின பிறகு பாத்திரங்கள் தான் மனசுல நிக்குமே தவிர 'மெஸேஜ்' நீர்த்துப் போயிடும்.

அப்ப, நீங்க வெறும் மெஸேஜ் சொல்லணும்னுதான் நினைக்கிறீங்களா? **Characterisation** எல்லாம் தொடர்கதையிலதானே பண்ண முடியும்! நிறையப் பேரும் படிப்பாங்க!

மா: தொடர்கதையினால பெருமளவு வாசகர்கள் கிடைப்பாங்கங்கிறது வாஸ்தவம் தான். ஆனா அது கதையினாலேயோ, பாத்திரப் படைப்பினாலேயோ இல்லே, சைகாலஜிகலா, ஒவ்வொரு வாரமும் அந்தப் பெயரைப் பார்ப்பதாலேயே அவன் ரொம்பத் தெரிந்தவனாகி விடுகிறான்.

உங்க கதைக்கே மறுபடி வருவோம். "காதல்ங்கிறது ஒரு மிக பிரும்மாண்டமான கனவு" அப்படிங்கறது உங்க கதையில ரொம்ப வருதே! அது ஏன்?

மா: அப்படித்தான் நான் நம்பறேன். இங்க நம்ம ஸொஸைட்டியை பத்திரிகை, பாடல், சினிமாவிலெல்லாம் காதல் மிகைப்படுத்தப்படுகிறது. வளரும் மாணவன் இதைப் பற்றித் தவறான கருத்துக்களுடன் வளர்க்கப்படுகிறான். அதனாலே, இது ஒண்ணும் பெரிய விஷயமில்லேன்னு வளரும் சமுதாயத்திற்குச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இளைஞர்களைப் பொறுத்த வரையும்:

இது சரி. ஆனால் பண்பட்ட ஒரு காதலைப் பற்றி, ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் நடுவுல இருக்கக் கூடிய அன்பைப் பத்தி உங்க கதையில நீங்க ரொம்பக் கையாளுவதில்லையே. அது ஏன்?

மா: அது ஒண்ணும் பெரிய விஷயமில்லேன்னு நான் நினைக்கிறேன். இந்த அன்புங்கறது, அப்பாவுக்கும் பிள்ளைக்கும் நடுவுல இருக்கு. அண்ணனுக்கும் தம்பிக்கும் நடுவுல இருக்கு. கணவனுக்கும் மனைவிக்கும் இடையிலயும் இருக்கு. சாதாரணமான இந்த விஷயத்தைப் பெரிசு பண்ணி எழுத என்ன இருக்கு?"

உங்க கதைகள்ல பெரும்பாலும் நீங்க பெண்களைப் பிரமாதமான புத்திசாலியாகக் காண்பிப்பதில்லே. இது உங்க சொந்த அபிப்பிராயமா?

மா: அப்படின்னு இல்லே. பெண்கள் புத்திசாலியாக இருப்பது எனக்கு ஒன்றும் ஆச்சரியமான விஷயம் இல்லே. **She can be as intelligent as a man.** ஆனால் அதி புத்திசாலியான பெண்கள் எல்லோருமே ஒரு விதத்தில் மனத்திற்குள் காயப்பட்டும் போகிறார்கள். ஒரு தீஸிஸ் மாதிரி இதை என்னால நிரூபிக்க முடியும். ஒரு பெண் புத்திசாலியாக இருப்பது சுற்றி இருப்பவர்களைப் பெரும்பாலும் கஷ்டப்படுத்துகிறது. இதுதான் உண்மை. இதைக் கதை

யாகச் சொல்ல வரும் போது வருத்தமாகத்தான் இருக்கும்.

பெண்கள் பத்திரிகைகள் இப்ப நிறைய வரது. இந்த மாதிரி பத்திரிகைகள். பெண்களுக்கு இன்னும் எவ்வளவு நன்மை செய்ய முடியும்னு நினைக்கறீங்க?

மா: என்னைக் கேட்டா பெண்களுக்குன்னு ஒரு தனி பத்திரிகையே அவசியம் இல்லேம்பேன். நானும் ஒரு இளைஞர் பத்திரிகை நடத்தினேன். இளைஞர்களின் பிரச்னைகள், கண்ணோட்டம் எல்லாத்தைப் பற்றியும் எழுதினேன். ஆனால் இந்த மாதிரி தனியாகப் பத்திரிகை நடத்துவதன் மூலம் அந்தப் பகுதியை நாம் இன்னும் தனிமைப் படுத்தறோம்.

மற்ற பத்திரிகைகள் பெண்கள் பிரச்னைகளை சீரியஸா எடுத்துக்கிட்டு சொல்லவராததுனாலதான் இந்தமாதிரி தனிப்பெண்கள் பத்திரிகை அவசியமாகிறது. இல்லையா?

மா: அந்த மாதிரி பெண்கள் பிரச்னைன்னு தனியா ஒண்ணு இருக்கா என்ன? அந்த இடத்துல அவளையும் ஒரு மானுட ஜீவனாகத்தான் பார்க்கணும். இந்தத் தனிமைப் படுத்தலில் எனக்கு உடன்பாடு இல்லை.

பேட்டி :

கிரிஜா ராகவன்.



## நமக்குள்ளே ஒரு கடிதம்!

திருமணமாகி புகுந்த வீடு செல்லும் ஒவ்வொரு பெண்ணின் மகிழ்ச்சியும், நிம்மதியும், தனிக்குடித்தனமாக இருந்தால் அவளின் கணவனையும், கூட்டுக் குடும்பமாக இருந்தால் கணவன், கணவனின் தாய் தந்தையர், அவனின் தமக்கைகள், சகோதரர்கள், சகோதரர்களின் மனைவியர் ஆகியவர்களைப் பொறுத்தும் அமைகிறது.

ஒரு பெண் தன் தலைவன் ஒருவனுடன் மட்டிலும் தனிக்குடித்தனம் நடத்தினால் அவள் எந்த ஒரு விஷயத்திலும் தன் கணவனை மட்டுமே அனுசரித்துப் போக வேண்டியிருக்கும். ஆனால் கூட்டுக் குடும்பத்தில் காலடி எடுத்து வைக்கும் பெண்கள் சந்திக்க வேண்டிய பிரச்னைகளோ ஏராளம் ஏராளம்! முதலில் அவள் தன் கணவனை இரண்டாவதாக வைத்துவிட்டு அக்குடும்பத்தில் இருக்கும் கணவனின் உறவினர்கள் அனைவரையும் எந்த ஒரு சிறு விஷயத்திற்கும் அனுசரித்து போக வேண்டி உள்ளது. எதற்காக எவ்வளவு ஆசைகளுடன் அவள் திருமணம் செய்து கொண்டாளோ, கடைசியில், எதுவும் நிறைவேறாமல், மாடு போல் வேலை செய்து கொண்டு, அனைவரின் ஏச்சுக்கும், பேச்சுக்கும் ஈடுகொடுத்துக் கொண்டு ஊமைப் போல் வாழும் வாழ்வே அவளுடையதாகிறது. இதற்கிடையில் தான் கூப்பிடும் போது மனைவி வராமல், எந்த ஒரு உற்சாகத்தையும் முகத்தில் காட்டவில்லையே என்ற கணவனின் கோபம் வேறு.

ஒருவனுக்குத் தன் மகளை, விற்பது போல் தந்தையர்கள் விற்க, ராஜா போல் மணமகன், அவளுடைய சீதனத்தையும் கைநிறைய வாங்கிக் கொண்டு அவளைப் பெற்றுக் கொள்கிறான். ஆனால் கண் கலங்காமல் அவளை மகிழ்ச்சியாக வைத்துக்கொள்வது தன் கடமை என்பதும், தாய், தந்தை, தங்கைகள், தம்பிகளைக் காப்பாற்றுவது போல் தன்னை நம்பி வந்திருக்கும் தன் மனைவியையும் மகிழ்ச்சியாக வைத்துக் கொள்வதும் கடமைதான் என்பது மட்டும் ஏன் அவனுக்கு மறந்து போய்விடுகிறது? கூட்டுக் குடும்பத்தில் தன், தாய், தந்தையுடன் அவன் மகிழ்ச்சியாக உணவு உண்டு நிம்மதியாக உறங்குகிறான். ஆனால் தன் மனைவி, தன் குடும்பத்தில் என்ன அவதிப்படுகிறாள். அவளுக்குத்தான் எந்தவிதத்தில் நிம்மதியையும், மகிழ்ச்சியையும் அளிக்க முடியும் என்பதை அவன் நினைத்துப் பார்க்கவே மறுக்கிறான்.

அதைப் போன்றே பையனின்

தாய், தகப்பனும் தங்களை தன் மகன் நன்றாக நிம்மதியாக வைத்துக் கொள்வது அவசியம் என்றுதான் நினைக்கிறார்களே தவிர தன் வீட்டில் அடைக்கலம் புகுந்திருக்கும் தன் மருமகளை நிம்மதியாக, சுதந்திரமாக வாழ வைக்க வேண்டும் என்று நினைப்பதே இல்லை. இவர்கள் செய்யும் தொல்லைகள் தாங்காமல் ஒரு பெண் தனிக் குடித்தனம் போகலாமென்றால் மட்டிலும் இவர்கள் அவளை ஏசுகிறார்கள். அவள் தனிக்குடித்தனத்தில் அனுபவிக்க நினைக்கும் மகிழ்ச்சியை அவளுக்குத் தங்களுடன் அவள் இணைந்து வாழும் பொழுதே கொடுத்தால் அவள் ஏன் தனிக்குடித்தனம் போகத் துடிக்கிறாள்?

'பெண்ணுக்குப் பெண்ணே எதிரி' என்ற பழமொழியை இதைப் படிக்கும் 'சகோதரி'கள் மாற்றப் பாருங்கள். அன்பு செய்வது தானே வாழ்க்கை?

— ஜலஜா.

## 4

மறுநாள் லஞ்ச்சின் போது ஹரியைக் கூப்பிட்டு அவன் அம்மாவிற்கு எப்படி இருக்கிறது என்று கேட்டாள்.

'பரவாயில்லை' என்று சொன்னான்.

''ஹரி உன் அக்கா என்ன படிச்சிருக்கா? இப்போ என்ன பண்றா?'' என்றாள்.

''அவளை அக்கான்னும் சொல்ல முடியாது. தங்கைன்னும் சொல்ல முடியாது'' என்றான் புதிராக.

விழித்தாள் உமா.

''ஏன்னா நாங்க ட்வின்ஸ்'' சிரித்தான் ஹரி.

அவளும் சிரித்தாள்.

''என்னை மாதிரியே எஸ். எஸ். எல். சி. வரைக்கும் படிச்சா. அப்புறம் படிக்க ரெண்டு பேருக்குமே வசதியில்லை. ஆனா அவ சுலபமா விட்டு வேலையை ஏத்துண்டு சகஜமாயிட்டா. எனக்குத்தான் மேல படிக்க முடியாம போயிட்டுதேன்னு ரொம்ப ஏமாத்தம்,'' வருத்தத்துடன் கூறி நிறுத்தினான்.

''ஏன் இப்பவும் ஒண்ணும் ஆயிடலையே. மேல படியேன்.''

''ஆசைதான். ஆனா வசதி?''

''வசதிதானே நான் தரேன். நீ படி. உனக்கு என்ன படிக்கணும்னு தோணுதோ படி. செலவைப் பத்தி கவலைப்படாதே. நா பார்த்துக்கறேன் ஓ. கே.?''

''நீங்களா? ஒரு நிமிடம் திணறி விட்டான் ஹரி. ஏற்கவும் முடியாமல் மறுக்கவும் முடியாத ஒரு திரிசங்கு நிலையில் தவித்த போது கடைசியில் படிப்பாசை அவனை வென்றது. சரி என்று உற்சாகமாகக் கூறியவன் மறுநாளே மதுரை யூனிவர்ஸிடிக்கு அப்ளிகேஷனும் போட்டுவிட்டான்.

ஒரு வாரம் கழித்து முன் பணம் கட்ட அதற்கு இதற்கு என்று உமா முதலில் ஐந்நூறு ரூபாய் கொடுத்த போது சந்தோஷத்தில் அழுது விட்டான் ஹரி. தன் நன்றியைத் தெரிவிக்க வார்த்தை இல்லாமல் திண்டாடினான்.

அவளுக்கும் ஆச்சரியமாக இருந்தது. எத்தனையோ பேர் வந்தார்கள் வேலைக்கு. அதில் இவனும் ஒருத்தனாக வந்தான்; அவ்வளவுதான். ஆனால் இவனிடம் மட்டும் ஏன் தனக்கு இனம் புரியாத பாசம். எது... எது இந்தப் பையனை அடிக்கடி நினைக்க வைக்கிறது. அந்தச் சக்திக்குப் பேர் என்ன? அன்பா? பாசமா? பூர்வ ஜென்ம உறவா? புரியாமல் தவித்த அவள் கேள்விகளுக்கு விடை அடுத்த ஒரு வாரத்திலேயே கிடைக்கும் என்று அவள் நினைக்கவில்லை. அந்த விடை தெரிந்த போது அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி... மனசுக்குள் ஒரு பூகம்பம் ஏற்படுகிறது என்று சொல்லலாமா? பூமி தலைகீழாகி, கடல் கொப்பளித்து, காற்றுப் பிரளயமாகி... எதற்கு ஒப்பிடலாம் இந்த அதிர்ச்சியை? இது எல்லாவற்றுக்கும் மேல் ஏதாவது இருந்தால் அதுதான் அந்த அதிர்ச்சி.

அன்று ஆபீஸில் லேசாக தலை வலிக்கவே குருமூர்த்தியிடம் தான் சற்று சீக்கிரமாகப் போவதாகச் சொன்னாள். வேலையும் அதிகமில்லை.

இருந்த வரைக்கும் முடித்துவிட்டு கிளம்பி அன்று அவளுக்குக் காலாற நடக்க வேண்டும் போலிருந்தது. டிரைவரிடம் தான் நடந்து போவதாகக் கூறிவிட்டு மெதுவாக நடக்கத் தொடங்கினாள்.

சிறிது தொலைவு சென்றதும் எதற்கோ திரும்பிப் பார்த்தவள் தூரத்தில் ஹரி மூச்சிரைக்க நடந்து வேகமாக வருவதைப் பார்த்ததும் நின்றாள்.

அருகில் வந்த ஹரியைப் பார்த்து சிரித்தாள்.

''ஆமாம், நீ எந்த பஸ்ஸில் போவே?''

''பஸ்ஸா?'' சிரித்தான் ஹரி. ''இப்படியே பொடி நடையா போனா அரை மணி ஆகாது வீடு போய்ச் சேர.''

''மை காட்! நடந்தா போற தினம்?''

''பின்னே? பஸ்ஸுக்கு நிற்க கால் மணி நேரம். அதில் ஏறி இடிபட்டு அங்கங்கு நின்னு வீடு போய்ச் சேர முக்கா மணி. அதை விட செலவில்லாம சீக்கிரமா நடந்து போறது எவ்வளவோ சுகம்.''

உமாவுக்கும் அன்று நடக்க வேண்டும் போல் இருந்தது.

''இன்னிக்கு உன்னுடன் நானும் நடக்கப் போகிறேன்'' என்றாள்.

''அய்யய்யோ எதுக்குங்க. கால் வலிக்கும். உங்க வீடு ரொம்ப தூரமாச்சே. இன்னிக்கு ஆபீஸ் கார் ரிப்பேரா?'' என்றான்.

''அதெல்லாம் இல்லை. என்னமோ இன்னிக்கு நடக்கணும்னு தோணித்து. கார் வேண்டாம்னு சொல்லிட்டேன்.''

இருவரும் மெதுவாகவே நடந்தனர்.

ஹரி சொன்னது போல் நடப்பது சுகமாகத்தான் இருந்தது. துணை இருந்தால் தினமுமே நடந்து விடலாம் என்று தோன்றியது.

ஏதேதோ பேசிக் கொண்டே எவ்வளவு தூரம் நடந்தார்களோ? ஹரி ஓரிடத்தில் தயங்கி நின்றான்.

"என்ன?" என்றாள்.

"எங்க வீடு வந்தாச்சே" என்று சிரித்தான்.

"இஸ் இட்? எங்க இருக்கு உங்க வீடு?"

"இதோ, இந்தப் பக்கம் போய் அடுத்த சந்தில் திரும்பினால் எங்க வீடுதான் முதல் வீடு."

"ஓஹோ" என்றவள் "பார்த்தியா உங்க வீட்டுக்கு என்னைக் கூப்பிடவே மாட்டேங்கறியே?" தலையை சாய்த்துக் கொண்டு அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

திகைத்து விட்டான் ஹரி.

"நீங்களா...? எங்க வீட்டுக்கா? அய்யய்யோ வேண்டாங்க... எங்க வீடு... ரொம்ப சின்ன வீடுங்க..." ரொம்பத் தயங்கினான் ஹரி.

"மனசுதான் பெரிசா இருக்கணும் ஹரி. வீடு எப்படி இருந்தால் என்ன? வா போக



# நேர்கையில்

— வித்யா சுப்ரமணியம்.

பத்தரை மாற்று தங்கமா, இல்லை.....?



லலிதாஸ்.
இலங்கை வங்கிகளுக்கு,
அரசு அங்கீகாரம் பெற்ற
தங்கத் தர நிர்ணையாளர்கள்.



இலங்கை வங்கிகளில் தங்கத்தை செக்யூரிட்டியாக கொடுத்து-கடன் வசதி பெற வருபவர்கள் ஒரு நபரை திருப்தி செய்ய வேண்டும் – அதுவே லலிதா நிர்வாகத்தினர். 1975லிருந்து இலங்கையின் அரச அங்கீகாரம் பெற்ற தங்கத் தர நிர்ணையாளர்களாக விளங்குபவர்கள். 35 வருடங்களாக, தங்க நகைத் தொழிலில் கடைப்பிடித்து வந்த இணையற்ற தரமே இந்த ஆஸ்தான ஸ்தானத்திற்கு காரணம். இன்றைக்கு அதுவே அவர்களை இலங்கையிலேயே தங்கத்தில் முதன்மையானவர்கள் என்று பிரசித்தி பெறச் செய்துள்ளது.

முதன்மையானவர்கள் என்ற இந்த ஸ்தானமே அவர்களை உலக அரங்கில் போட்டிக்கு எடுத்துச் சென்றுள்ளது. ஆனால் ஒரு மாற்றம். ஆம், ஸ்பெயின் நாட்டிலுள்ள மாட்ரிட் என்ற நகரில் நடந்த போட்டியில், லலிதாவின் தரம் நிர்ணயிக்கப்பட்டது. முடிவு : 1983 மற்றும் '84ஆம் ஆண்டுகளுக்கான 'மாசுமறுவற்ற தங்கத்தரத்தை மேற்கொள்பவர்கள்' என்ற பரிசு லலிதாவிற்கு அளிக்கப்பட்டது.

இந்த மாசுமறுவற்ற தங்கத் தரத்தைக் கொண்ட நகைகளை லலிதாவின் ஆசியாவிலேயே மிகப் பெரிதான ஷோரூமில் காணலாம். ஆம், இந்த லலிதாவின் தங்கத் தர்பார் கொழும்புவின் ஒரு முக்கிய வீதியில் அமைந்திருக்கிறது. அங்குள்ள ஆயிரக்கணக்கான நகைகள் ஒவ்வொன்றும் உங்கள் அழகுக்கு ஓர் ஆராதனையாக விளங்கக் கூடிய கலை படைப்புகள்.

இப்பொழுது லலிதாஸ் உங்களுக்கு அளிப்பது 2500க்கும் மேற்பட்ட ஈடு இணையில்லாத தங்க, வைர மற்றும் வெள்ளி நகைகள். கலைக்கண்ணோடு, நுண்ணிய வடிவுகளில் பிறந்துள்ள ஒவ்வொன்றும் மணிக்கணக்காக, நாட்கணக்காக ஏழு திறன் வாய்ந்த கலைஞர் குழுக்களின் உழைப்பின் பிறப்புகளே.

மேலும், இவற்றைக்காண ............... உங்களைக் கடல் கடந்து இலங்கைக்கு செல்லவேண்டும் என்று கூறவில்லை.




இப்பொழுது இங்கு சென்னையிலேயே.

லலிதா ஜுவல்லரி மார்ட்

123 உஸ்மான் ரோடு, பனகல் பார்க்,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 445939, 442601.

Vividize 221

உரிக்கப்பட்ட கோழியை வாங்கும் போது இஞ்செக்ஷன் மூலம் தண்ணீர் ஏற்ற வாய்ப்பு இருக்கிறது. ஆகவே அமுக்கிப் பார்த்து வாங்க வேண்டும்.

— எம். ராதா.

லாம்'' என்று தீர்மானமாக அவள் கூறியதும் மறுத்துப் பேச முடியாமல் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போனான்.

வாசலிலேயே அவளை ஒரு நிமிடம் நிற்க வைத்தவன் அவசர அவசரமாக உள்ளே சென்று முன் அறையில் கிடந்த சில அருவசிய சாமான்களை இடம் மாற்றி சித்ராவை காப்பி போடச் சொல்வதற்குள் உமாவே உள்ளே வந்துவிட்டாள்.

''என்ன ஹரி எனக்காக வீட்டை பலமா ஒழிக்கற? அப்படி என்ன நா பெரிய மனுஷியா?'' என்று கடிந்து கொண்டவள்,''உங்க அம்மா இல்லையா?'' என்றாள்.

அதற்குள் காப்பியுடன் வெளியே வந்தாள் சித்ரா.

''வாங்க, வாங்க. உங்களைப் பத்தி ஹரி நிறைய சொல்லியிருக்கான். உட்காருங்க'' என்று ஒரு மோடாவை எடுத்துப் போட்டாள்.

''இவதான் சித்ரா'' என்று அறிமுகப் படுத்தி வைத்தவன்,

''அம்மா எங்கே சித்ரா?'' என்று கேட்டான்.

''அவளாவது வீட்டில் சும்மா உட்கார்றதாவது! சம்பா மாமி வீட்டு வரைக்கும் போயிட்டு வரேன்னு. ஏதோ வேலை சொல்றேன்னுளாம். நீங்களே சொல்லுங்கோ அக்கா. இந்த அம்மா இத்தனை நாள் எங்களுக்காக ஓடா உழைச்சு தேஞ்சாச்சு. இப்போ ஹரி பெரியவனாயிட்டான். வேலைக்கும் போறான்.
இவங்க எதுக்கு இந்தச் சமையல் வேலைக்குப் போய் நெருப்புங்கிழ சாகணும்?'' படபடவென்று சிறிதும் வித்தியாசம் பாராட்டாமல் பேசியவளை ரொம்பப் பிடித்தது உமாவிற்கு.

''சமையல் வேலையா?'' என்றாள்.

''பின்னே என்ன எங்கம்மா உங்களாட்டம் ஆபீஸிலா வேலை பாக்கறு? திவசம், சீமந்தம், கல்யாணம், எட்ஸட்ரா, எட்ஸட்ரா. இப்படி வீடு வீடா சமைக்கப் போவாங்க. அப்புறம்பண்டிகைநாள்ளபட்சணம்பண்ணி குடுப்பாங்க. அப்படியும் வேலையில்லன்னு வீட்டுலேயே அப்பளம், வடாம், வற்றல் இப்படி பண்ணிக்கிட்டு ஒரு நிமிஷம் சும்மா உட்கார மாட்டாள்.'' படபடாசாக பேசின சித்ராவை புன்சிரிப்போடு பார்த்தாள் உமா. அந்தத் தாயை நினைத்து அவள் மனத்தில் ஒரு பரிதாபம் சுரந்தது.

சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, புறப்பட்டாள். பஸ் ஸ்டாண்ட் வரை கூடவே வந்து ஏற்றிவிட்டான் ஹரி.

வீட்டுக்கு வந்தாள். அதிசயமாக வீடு பூட்டியிருந்தது. பக்கத்து வீட்டில் அம்மா சாவி கொடுத்திருந்தாள். அம்மாவின் ஒன்று விட்ட தம்பி மனைவிக்கு திடீரென்று பிரசவ வலி தோன்றியிருப்பதாகத் தகவல் வந்ததும் அப்பாவை துணைக்கு அழைத்துக் கொண்டு போயிருப்பதாகவும் அப்பா ராத்திரி திரும்பி விடுவதாகக் கூறியதையும் மாமி சொல்ல அறிந்தாள்.

வீட்டைத் திறந்து கொண்டு உள்ளே வந்தாள். அம்மா இல்லாமல் வீடு என்னவோ போலிருந்தது.

அடுக்களை மேடை மீது தோசையும் சின்ன கிண்ணத்தில் சட்னியும், பிளாஸ்கில் காப்பியும் வைத்திருந்தாள் மங்களம். நல்ல பசியில் இருந்ததால் சாப்பிட்டுக் காப்பியும் குடித்தாள். அப்பா இருந்தால் போரடிக்காமல் ஏதாவது பேசிக் கொண்டிருப்பார். அவரில்லாமல் போரடித்தது. என்ன செய்வது என்று தெரியவில்லை அவளுக்கு. டி.வி. போட்டுப் பார்த்தாள். போரடித்தது. அணைத்து விட்டு ரேடியோ போட்டாள். சிறிது நேரத்தில் அதுவும் போரடிக்கவே டீப்பாயின் மீது இருந்த அன்றைய நாளிதழ்களைப் படித்தாள். ஏற்கெனவே காலையில் ஒரு தரம் படித்து விட்டதால் மேற்கொண்டு அதில் படிக்க ஒன்றுமில்லாமல் போகவே வேறு ஏதாவது புத்தகம் படிக்கலாம் என்று தோன்றவே அப்பாவின் புத்தக பீரோவிலிருந்து புத்தகம் எடுக்க அவரது அறைக்குள் நுழைந்தாள்.

வரிசையாய் பாரதியார் பற்றிய புத்தகங்கள். அப்பா ஒரு பாரதிப் பித்து. 'நான் கண்ட பாரதி' 'பாரதி ஒரு நெருப்பு,' 'பாரதி பாதையில்' இப்படி ஏகப்பட்ட பாரதி பற்றிய புத்தகங்கள். எல்லாம் ஏற்கெனவே படித்தவைதான். திடீரென்று அவளுக்கு முன் தினம் இரவில் அப்பா சொன்னது ஞாபகம் வந்தது. புதிதாக ஏதோ கவிதை எழுதியிருப்பதாக சொன்னாரே, எப்படி எழுதியிருக்கிறார் என்று பார்க்க அவளுக்கு ஆவலாக இருந்தது.

அப்பாவின் மேஜை டிராயரைத் திறந்தாள். அந்த பழுப்பு கலர் டைரி. இதில் தானே அப்பா எழுதிக் கொண்டிருந்தார். அது அடியில் எங்கோ இருந்தது. தேடி எடுத்தாள். அது பழைய டைரி. இதிலா பாரதியாரைப் பற்றி எழுதினார்? என்று ஆச்சரியப்பட்டு பிரித்தாள். முதல் இரண்டு மூன்று மாதம் வரை அதன் பக்கங்கள் காலியாக இருந்தன. பிறகு திடீரென்று ஒரு பக்கத்திலிருந்து தொடர்ச்சியாக எழுதப்பட்டிருந்தது. மேலோட்டமாகப் படிக்க ஆரம்பித்தவளுக்கு படிக்கப் படிக்க அதிர்ச்சியாயிருந்தது. அடுத்தவரின் டைரியைப் படிப்பது தவறு என்பதை ஒருகணம் மறந்து முழுதும் படித்தவளுக்குத் தலைசுற்றியது. அப்பாவா...? அப்பாவா இப்படி என்று ஆச்சரியமாகவும் அதிர்ச்சியாயும் இருந்தது. அந்த விஷயங்களை ஜீரணிக்கமுடியாமல்திண்டாடினாள். அவளால் நம்ப முடியவில்லை. தான் காண்பது கனவோ என்று தன்னையே கிள்ளிப் பார்த்துக் கொண்டாள். சந்தேகம் நீங்க மறுபடியும் படித்தாள்.

(தொடரும்)

V.V.D

கற்பனை பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவைப் பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை.
செல்லமாக வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்
அக்கூந்தலுக்கு
வி.வி.டி.தேங்காய் எண்ணெய்...

VVD-1/86




**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**
*இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்*

V.V.D





# பழநி வைகாசி

தமிழ்க் கடவுளான முருகன் கோயில் கொண்டிருக்கும் பல தலங்களில் தலைசிறந்தது பழநியம்பதி. இதற்கு சிவகிரி, பழனாபுரி, பொதினி என்ற பெயர்களும் உண்டு.

சங்கநூலாகிய அகநானூற்றிலே இந்தப் பதி "பொதினி" என்று கூறப்பட்டிருக்கிறது. அந்தச் சொல்லே மருவிப் "பழனி" என்றாயிற்று. பழனங்கள் (வயல்கள்) சூழ்ந்த இவ் ஊரை பழனி என்றும் கூறுவர்.

தவிர, பழநி என்று பேர் வந்ததற்குப் புராணக் கதையும் உண்டு.

திருக்கயிலையில் சிவபிரானைக் காணச் சென்ற நாரதர் ஒரு மாதுளங்கனியை அவர் திருமுன் வைத்தார். பக்கத்தில் அமர்ந்திருந்த இரண்டு குமாரர்களையும் நோக்கி "யார் உலகை முதலில் சுற்றி வருகின்றாரோ அவருக்கு இக்கனியைக் கொடுப்போம்" என்று பரமசிவன் கூறினார்.

உடனே செவ்வ் முருகன் சிவகுருநாதன் மயில் மீது புறப்பட்டார். அவர் உலகை வலம் வருமுன், விநாயகர் தம் பெற்றோர்களைச் சுற்றி வந்து பழத்தைப் பெற்றார். முருகன் இதைக் கண்டு சினங்கொண்டார். இறைவனும் இறைவியும் "பழம் நீயாயிருக்க உனக்கு வேறு பழமும் உண்டோ?" என்று கூறினார்.

அப்படியும் ஆறுதல் அடையாமல் திருவாவினன்குடி வந்து சில காலம் தங்கி, பின் பழநியங்கிரி மீது அமர்ந்து அருள் வழங்கி வருகிறார். "பழம் நீ" என்று அம்மையப்பர் சொன்னபடியால் இத்தலத்திற்குப் "பழநி" என்று பேர் வழங்கலாயிற்று. இதனை தல புராணங்களும் கூறுகின்றன.

இப்பழநி மலை இங்கு உண்டானதற்கு இன்னொரு புராண வரலாறும் உண்டு. அகத்தியர் கயிலாயத்தில் சிவகிரி, சத்திகிரி என்ற இரு குன்றுகளைத் தரிசித்துத் தென்னாடு வந்தார். இடையில் இடும்பாசுரனையும், அவன் மனைவியையும் கண்டார்.

இடும்பனை அந்த இரு குன்றுகளை பொறுத்துக் கொண்டு பொதிகை மலைக்கு வரச் சொன்னார். அவ்வாறே சென்ற இடும்பன் ஒரு தண்டில் இருபக்கத்திலும் குன்றுகளைக் கயிற்றில் கட்டித் தொங்க விட்டுக் கொண்டு தென்னாடு நோக்கி வந்தான்.

ஆவினன் குடி அடைந்து அவைகளைக் கீழே வைத்துச் சற்று இளைப்பாறினான். பிறகு தூக்கிப் பார்த்தான், முடியவில்லை. காரணம் காணச் சுற்றும் முற்றும் பார்த்தான். குன்றின்மேல் குராமரத்தடியில் ஒரு சிறுவன் நிற்பதைப் பார்த்தான். குன்றை விட்டுப் போ எனச் சிறுவனிடம் கோபமாகக் கத்தினான்.

"குன்றுகள் என் இருப்பிடம்" என்று அப்பிள்ளை கூறிற்று. இடும்பாசுரன் அக் குழந்தைமேல் பாய முனைந்தான். திருமுருக னாகிய அப்பாலன் கையில் இருந்த தண்டை எறிய இடும்பன் அடி சாய்ந்தான். உயிர்ப் பிச்சை, தாலிப்பிச்சை இவைகளை வேண்டிக் குமரனை வேண்டினாள் இடும்பி. அவரும் அப் படியே அருளினார்.

உயிர்பெற்ற இடும்பன் இரண்டு வரங்கள் பெற்றான், சூராவடி வேலனிடம்! "ஒன்று, என்றும் அவன் வாயில் காவலனாக இருப்பது; மற்றொன்று தன்னைப் போல் காவடி தாங்கி வரும் அன்பர்கட்கு அருள்சுரப்பது."

இப்பழநி மலை மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்தது. இவ்வூர் கடல் மட்டத்திற்கு 668 அடி உயரத்திலுள்ளது. இம்மலையின் உயரம் 450 அடி. இம்மலையைச் சுற்றி வர 1¼ மைல் தொலைவுள்ள ஓர் அழகிய சாலையும் அமைந்துள்ளது.

பல சிறு கோயில்களும், சாதுக்களின் மடங்களும், அறச்சாலைகளும், மயில் மண்டபங்களும் கிரி வீதி முழுவதும், திகழ்கின்றன. மலைக்கு 2½ மைல் தூரத்தே சண்முக நதியெனும் புனித ஆறு ஓடிக் கொண்டிருக்கிறது. இடும்பன் மலை அருகே எழில் பெற நிற்கின்றது.

வேல் மண்டபத்தின் கற்றூண்கள் அற்புத சிற்ப அமைப்புடன் பொற்புடன் நிற்கின்றன.

அதைத் தாண்டினால் நவரங்க மண்டபத்தைச் சேரலாம். அங்கிருந்துதான் பழநியாண்டவன் திருக்கோலத்தை வணங்க வேண்டும். அவர் திருவுருவம் போக சித்தரால் நவபாஷாணத்தினால் செய்யப்பட்டதென்பர். அத்திருமேனி மேல் அபிஷேகம் செய்யப் பெற்ற பால், தேன், சந்தனம் இவைகளை உண்டோர் தமக்குள்ள நோய், நீங்கப் பெறுகின்றனர்.

தற்சமயம் இம்முறை எல்லாம் உற்சவருக்குத்தான்! ஆண்டவனுக்கு அபிஷேகங்களும் பலவித அலங்காரங்களும் எந்நேரமும் நடந்து கொண்டேயிருக்கும். வெவ்வேறு திருக்கோலங்களிலும் திருமேனிப் பொலிவு, பார்த்தவர் மனத்தைப் பரவசப்படுத்தும். முருகன் திருப்பதிகளுக்குள் மிக அதிகமாக மக்கள் வழிபடுவது இந்தக் கோயில் ஒன்றுதான் எனலாம்.

தமிழ் நாட்டினரேயன்றி மலையாள நாட்டினரும், முஸ்லீம்களும் வந்து வணங்குகின்றனர். அன்பர்கள் கோரிக்கைகள் நிறைவேற முடியிறக்குதல், காவடிகளில் தேன், பால், சர்க்கரை, இளநீர், பன்னீர், திருநீறு (விபூதி) இவைகளைக் கொண்டு வருதல்,

# விசாகத் திருவிழா

பழநி ஆண்டவன் சந்நிதி மேற்கு நோக்கியது. திருவாயிலில் நுழைந்து மயில் மண்டபம், மாணிக்கபடி மண்டபம், தாண்டி இராஜ கோபுர வாசல் வழியாகப் பாரவேல் மண்டபத்தை எளிதில் அடையலாம். பார



பஞ்சாமிர்த அபிஷேகம் செய்தல் இவை இடையறாது நிகழ்ந்த வண்ணம் இருக்கும். பழநி பஞ்சாமிர்தம் உலகப் பிரசித்தி பெற்றது.

பழநி முருகனுக்கு வைகாசி விசாகம், ஐப்பசி ஷஷ்டி, கார்த்திகை கிருத்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம் இந்த நாட்களில் சிறப்பாகத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் கார்த்திகை, ஷஷ்டி, விசாகம், அமாவாசைகளிலும் விழாக்கள் உண்டு.

சித்திரை மாதப் பிற்பகுதியிலும், வைகாசித் திங்கள் முற்பகுதியிலும், அக்கினி நட்சத்திர காலத்திலே மக்கள் திரளாக வந்து மலைவலம் வருகின்றனர்.

கோயிலின் உட்பிராகாரத்தில் போகர், மலைக் கன்னிமார், சிவலோகநாதர், அம்பிகை, சண்டேசுவரர் இவர்கள் கோயில்கள் உள்ளன. மிகப் பழைய காலத்திலிருந்து போக சித்தர் மாணவரான புலிப்பாணி முனிவர் மரபினரே ஆண்டவன் திருமேனி தீண்டிப் பூசித்து வந்தனர். பின்னால், திருமலை நாயக்க மன்னனின் அந்தண அமைச்சர் தளவாய் இராமப்ப அய்யன் என்பவர் பழநிமலைத் தரிசனத்திற்கு வந்த போது புலிப்பாணி மரபினர் கையினால் பிரசாதம் வாங்கக் கூடாதென்று நினைத்து

அவர்களை நீக்கி ஆதி சைவ அந்தணப் பெரு மக்களைப் பூசைக்கு அமர்த்தினார்.

சேரமான் பெருமானும், விஜயநகர மன்னர்களும், பிற்காலத்தில் மதுரையை அர சாண்ட நாயக்க மன்னர்களும், பாளையக் காரர்களும் கோயில் திருப்பணிகள் பல செய் தார்கள். செட்டி நாட்டு நகரத்தார்களும் அவ்வப்போது வேண்டிய திருப்பணிகள் செய்தனர், பல அறப்பணிகளும் செய்து வருகிறார்கள்.

### திருவாவினன்குடி

இத்திருக்கோயில் பழைய கோயில். இது மலையடிவாரத்திற்குப் போகும் வழியில் உள்ளது. இதையே நக்கீரர் பெருமான் தாம் பாடிய திருமுருகாற்றுப் படையில் விரி வாகப் பாடியுள்ளார்.

முனிவர்களும் கந்தர்வர்களும் திருமால், பிரமன், உருத்திரன் என்ற மும்மூர்த்திகளும், இந்திரனும் முப்பத்து மூன்று தேவர்களும், பதினெண் கணங்களும், ஆகாய வழியே வந்து தங்கள் குறைகளை நீக்கிக் கொள்வதற் காகத் தெய்வ யானையுடன் திருவாவினன் குடியில் வீற்றிருக்கும் முருகப் பெருமானைத் தரிசிப்பார்கள் என்று நக்கீரர் பெருமான் கூறுகிறார்.

இந்தத் திருவாவினன்குடிக்குச் சித்தன் வாழ்வு என்ற பெயரும் உண்டு. இதை ஆரு தாரத்தலங்களில் ஒன்றான ''மணிபூரகத் தல மாக ஆன்றோர் கொண்டிருக்கிறார். இங்கு மயில் மீதமர்ந்து குழந்தை வேலாயுத சாமி காட்சியளிக்கிறார். காணக் கண் கோடி வேண் டும் இதனை.

''ஆதியந்தம் உலா ஆசுபாடிய சேரர்
கொங்கு வைகாவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள்
பெருமாளே!''

என்று அருணகிரியார் அழகுறப் பாடுகிறார்.

— சன்மிஷ்டை.



சைதாப்பேட்டை அரசு மருத்துவ மனையைச் சேர்ந்த டாக்டர்கள் 'முழுமை யான சுகவாழ்வுத் திட்டம்' என்ற பெயரில் ஒரு முகாமை நடத்தி வருகிறார்கள். ஒவ் வொரு சனிக்கிழமையும் வேறு வேறு இடங் களில் முகாம் — குறிப்பாக ஏழை எளியவர் களுக்காக நடத்துகிறார்கள். வியாதிகளை குணப்படுத்துவதோடு மட்டுமல்லாமல், வியாதி வராமல் காப்பது, ஆரோக்கிய வாழ் வின் தேவை, வழிகளை பாமர மக்களும் புரிந்து கடைபிடிக்கும் எளிய முறைகளை எடுத்துச் சொல்லி வருகிறார்கள்.

இதன் சிறப்பு அம்சம் தேசிய சேவை திட்டத்திலுள்ள (N.S.S.) மாணவ மாண விகள் இவர்களுடன் இணைந்து பணியாற்று கிறார்கள். சென்னையிலுள்ள செல்லம்மாள், வைஷ்ணவா, லேடி வெலிங்டன் கல்லூரி, பள்ளி மாணவிகளும், நந்தனம் கலைக்கல் லூரி, டி. பி. ஜெயின் கல்லூரி மாணவர் களும் முழு ஒத்துழைப்பைத் தருகிறார்கள். தவிர முகாமிடும் இடத்திலுள்ள சமூக சேவை நிறுவனங்களும் உதவுகின்றன. 'நண்பர்கள் சேவை சங்கம்' எனும் கல்லூரி மாணவர்களாலேயே நடத்தப்படும் சங்கமும் எங்களுக்குப் பல வசதிகளை செய்து தந்துள்ளது'' என்று கூறுகிறார். இத்தத் திட் டத்தை வகுத்து, சிறப்பாக நடத்தி வரும் டாக்டர் சேது மாதவன்.

ஈக்காட்டு தாங்கலில் இவர்களின் சேவை நடந்து கொண்டிருந்த போது நண் பர்கள் சேவை சங்கத்தின் தலைவரான இளை ஞர் பாலசுப்பிரமணியத்தைச் சந்தித்த போது —

''அண்மையில் சென்னையைப் பாதித்த புயல், பெய்த மழையின் பின் விளைவுகள் எங்கள் பகுதியை பெரிதும் பாதித்தது. காலரா, டைஃபாயிடு, மஞ்சள் காமாலை அதிகமானதால், டாக்டருடன் தொடர்பு கொண்டு எங்கள் பகுதியில் முகாமிற்கு ஏற்பாடு செய்தோம். எதிர்பார்த்ததைவிட அதிகமான வரவேற்பு கிடைத்திருக்கிறது.'' என்றார் சந்தோஷத்துடன்.

— எஸ். ரவிசங்கர்.

# பவித்ர பாகீரதியின்



# பரிதாபக் கோலம்

"கங்கா ஜல லவ கணிகா பீதா... க்ரியதே தஸ்ய யமனே ந சர்ச்சா" என்கிறது, ஆதிசங்கரரின் பஜகோவிந்தத்தில் ஒரு சுலோகம்..அதாவது ஒருசொட்டுகங்கையின் நீரைப் பருகியவனைப் பற்றிய எண்ணத்தையே எமன் விட்டு விடுகிறான்' என்பது. பாகிரதி என்றும், ஜாஹ்னவி என்றும், கங்கை என்றும் புனிதத்துக்கு உறைவிடமாக அழைக்கப்படும் அந்த பவித்திரமான கங்கையின் ஜலம், இன்று குடிக்கும்படியான நிலையிலா உள்ளது? குளிக்கக் கூட தகுதியில்லாமல் இருக்கிறதே!

என்றிலிருந்து மனிதன் அருட்செல்வமான ஆன்மீகத்தைப் பின் தள்ளி, பொருட்செல்வத்தைவழிபடஆரம்பித்தானோ..அன்றிலிருந்து தன்னை வாழ வைக்கும் இயற்கையையே தாக்க ஆரம்பித்தது விந்தைதான். மலைகள் தகர்கின்றன. காடுகள் அழிகின்றன. நதிகள் மாசுபடுகின்றன. ஆகாயம், காற்று, நீர், சூழ்நிலை எல்லாம் நச்சாகி அவனுடைய ஆரோக்கியத்தையே அச்சுறுத்துகின்றன. அதிலும் கங்கையின் கதை ஒரு கண்ணீர்க் கதை. உலகிலேயே புண்ணிய நதிகளில் உயர்த்தியாகக் கருதப்படும் இதைச் சுற்றி, இந்தியாவின் இதிகாசமே சுழல்கிறது. இவ்வளவு புனிதமான இவள் இன்று மாசுபட்டு நிற்கிறாள். கங்கோத்ரியில் தொடங்கி, ரிஷிகேசம்வரை இமயத்தின் ஊடே அவள் புகுந்து வரும்போதே அவள் அணிந்திருக்கும் பசுமையான காடுகள் என்னும் உடைகளைக் களைகிறான் மனிதன். இது முதல் கட்டம். சமவெளியில் இறங்கியதும், ரிஷிகேசத்தில் ஆரம்பிக்கும்தாக்குதல்வங்கக் கடலில் சங்கமம் ஆகும்வரை 2500 கிலோ மீட்டர்கள் தொடருகிறது. ரிஷிகேசத்தில் அவள் இருமருங்கிலும் வானுயர உள்ள மலைகளின் இடுக்கிலிருந்து மலையைக் கிழித்துக் கொண்டு இறங்கும் காட்சியைக் காண இருகண்கள் போதா. குறுக்கே லக்ஷ்மண் ஜூலா (லக்ஷ்மண் ஊஞ்சல்) எனப்படும் பாலம். பாலத்துக்கு அக்கரையில் இந்து மதத்தில் உள்ள அத்தனை முக்கிய தெய்வங்களுக்கும் ஒரு 13 மாடி 'மல்ட்டி ஸ்டோரி' கோயில். (இங்கே நான் பார்த்த ஓர் அதிசயத்தையும் கூறிவிடுகிறேன். வரும்யாத்திரிகர்கள் கோயில்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும் தர்மம் செய்ய வேண்டும் என்பதால், மூட்டை மூட்டையாகச் சில்லரைகளை வரிசை

யாகக் குவித்து வைத்துக் கொண்டு, கமிஷனோ, லாபமோ இல்லாமல் 'விற்கிறார்கள்.')
இந்த ரம்மியமான, புனிதமான சூழ்நிலையிலிருந்தே அவள் நச்சரிக்கப்படுகிறாள் என்பதுதான் வேதனைக்குரிய விஷயம். அடுத்தது ஹரித்துவார். அவளுடைய சமவெளிப் பயணம் ஆரம்பம். 12 ஆண்டுகளுக்கொரு முறை கும்பமேளா நடப்பது இங்கேதான்.

பாவம்பழிவாங்கும் என்பது பாகீரதியின் விஷயத்திலும் உண்மை. இமயத்தில் துகிலுரியப்பட்டவள், பீஹாரிலும் வங்கத்திலும் மனிதனைப் பழிவாங்குகிறாள். பசுமைக்காடுகள் மறைய மறைய, மலைகளின் மேற்போர்வை அகற்றப்பட்டு, லட்சோப லட்சம் டன் மண்ணும், கற்களும் மழையில் கரைந்து அடித்து வரப்பட்டு, நதியின் சமவெளிப் பகுதிகளில் படிகின்றன. அங்கே மொட்டை மலைகள் பாலைவனங்களாகின்றன. இங்கே நதி மண்மேடு இடுகிறது. ஆழம் குறைந்தால் நதியின் அகலம் அதிகமாகிறது. நதியின் போக்கு மாறுகிறது. கிராமங்கள் மூழ்குகின்றன. அணைக்கட்டுகளில் வண்டல் மண் தேக்கம். ஆயிரக்கணக்கான டன் வண்டல் மண்ணை அகற்றுவது (De-Sitting) ஒரு பெரிய சவால்!

இது ஒருபுறம் இருக்க, முன்னேற்றத்தின் பெயரால், மனிதனின் பேராசையும், அவனுடைய அரைகுறை தொழில் முறைகளுமே (Half-baked Technologies). இன்று உலக முழுதும் காற்றும், நதிகளும், கடலும், பூமியும் நச்சு சூழலுக்குள்ளாதவற்குக் காரணம், இயற்கையின் மடியிலிருந்து தனக்கு வேண்டியதைப் பிடுங்கிக் கொண்டபின், வேண்டாதக் கழிவுப் பொருள்களை வைத்துக் கொண்டு அவைகளை என்ன செய்வது என்று தெரியாமல், நாலு பக்கமும் வாரி இறைப்பதே

அணுகதிரியக்கக்கழிவுப்பொருள்களானாலும் (Nuclear wastes), ரஸாயன, தொழிற் கழிவுகள் ஆனாலும் (Chemical and Industrial wastes) கழிவு விஷ நீர் (effluents) ஆனாலும், இந்த அடிப்படை உண்மை (basic fact) என்னவோ ஒன்றுதான்!

அதிலும் கங்கை எட்டு மாநிலங்கள் வழியாகப் பாய்கிறது — இமாசலப் பிரதேசம், பஞ்சாப், ஹரியானா, உ. பி., ராஜஸ்தான், ம.பி., பீஹார், வங்காளம் ஆகியவை அவை. கங்கை தன் மாசின் முக்கால் பங்கை சாக்கடைகளிலிருந்தே பெறுகிறது. தொடக்க நகரமான ஹரித்துவாரத்தில் மட்டும், பத்து திறந்த சாக்கடைகள் கங்கையில் கலக்கின்றன. மேலும் மேலும் நச்சுக் கலப்பு அலகாபாத் வரை அதிகரித்துக் கொண்டே செல்கிறது. அதற்கப்புறம் யமுனை, கண்டக், கோசி, சக்ரா ஆகிய நதிகள் கலப்பதால், நச்சின் பரிமாணம் சற்றே குறைகிறது. இதை மறுபடி பீஹார், வங்காளத்தின் தொழிற்சாலை கழிவுகள் ஈடுசெய்து விடுகின்றன!

சமீபத்தில் ஹரித்துவாரத்தில் மட்டும் கும்பமேளாவில் அசுத்தத்தைத் தடுக்க ஐயாயிரம் தாற்காலிக 'பொது வசதி' இடங்களும், மூவாயிரம் தொட்டிகளும் 24 மணி நேரமும் வேலை செய்தனர் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

நாட்டில் உள்ள 14 நதித் திட்டங்களில், அளவிலும், முக்கியத்திலும், கங்கையைப் போன்றது எதுவுமே இல்லை. நாட்டின் நீர்ப்பாசன நிலங்களில் 100க்கு 43 பங்கு இங்குதான் உள்ளது. 2525 கிலோ மீட்டர் நீளமுள்ள இது, தன் கரையோரம் வசிக்கும் நூறு நகரங்கள், மற்றும் ஆயிரக்கணக்கான கிராமங்களின் 155 லட்சம் மக்களின் நீர்த் தேவையைப் பூர்த்தி செய்கிறது.

எல்லாவற்றையும் பார்க்க மோசமான அவலம் காத்திருப்பது காசியில். கங்கையின் மடியில் இறப்பதே புண்ணியம் என்ற எண்ணத்தால் உந்தப்பட்டு, வாழ்நாள் முழுதும் சம்பாதித்த பணத்தை இங்கே கொண்டு வந்து நாட்களை எண்ணிக் கொண்டிருக்கும் வயோதிகர்கள் இந்தியா முழுவதிலிருந்து

'வாட்டர் ஃபில்டரில் நீரை வடிகட்டி குடித்தாலும், கொதிக்க வைத்து ஆற வைத்த தண்ணீரைப் போல அவ்வளவு சுத்தமில்லை. நுண்ணிய பாக்டீரியாக்கள் தங்கி இருக்கும் எனப் பயமுறுத்துகிறார்கள்.

அதையும் ஒழித்து நூறு சதவீத சுத்தமான தண்ணீரை நாங்கள் தருகிறோம் என்கிறார்கள் யுரேகா ஆக்வா கார்டு கம்பெனி.

இந்த வாட்டர் ப்யூரிஃபையரின் இரண்டு பக்கமும் இரண்டு குழாய்கள் உள்ளன. முதல் குழாய் அழுக்கு, மற்றும் கலங்கல் எல்லாவற்றையும் ஒழிக்கிறது. அடுத்த குழாயில் அல்ட்ரா வயலட் கதிர்கள் மூலம் நீரிலுள்ள நுண்ணிய பாக்டீரியாக்களை ஒழித்துத் தூய்மையான தண்ணீரைத் தருகிறதாம்.

இந்தக் கருவியை நல்ல நீர் வரும் குழாயோடு இணைத்துவிட்டால் போதும்.



# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் முதற் சுவையிலிருந்தே.

நான்கு மாதங்கள் ஆகும் பொழுது உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூட திட உணவும் தேவை. அவனுக்கு ஸெரிலாக்கின் அனுகூலங்களைப் புகட்ட இதுவே உகந்த வேளை.

**போஷாக்கு அனுகூலம்:**
ஒவ்வொரு தடவை ஸெரிலாக் ஊட்டும் பொழுதும் உங்கள் குழந்தைக்குத் தேவையான புரத சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின் மற்றும் தாது ஆகிய எல்லா போஷாக்கு சத்துக்களும் அவனுக்கு கிடைக்கின்றன. அனைத்தும் குழந்தையின் விசேஷ தேவைக்கு ஏற்றபடி சரியான விகிதத்தில் தயாரிக்கப்பட்டுள்ளன.

**சுவையில் அனுகூலம்:**
ஸெரிலாக் நலம் தரும் போஷாக்குடன் நல்ல சுவையும் கொண்டது. ஸெரிலாக் சுவை என்றாலே குழந்தைகளுக்கு கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம் :**
ஸெரிலாக் குழந்தை உண்பதற்கேற்ப முன்கூட்டியே பதமாக்கப்பட்டுள்ளது. கொதிக்கவைத்து ஆறிய வெது வெதுப்பான நீரில் கலந்தால் போதும். நொடியில் தயார் ஸெரிலாக் உணவு.

உங்கள் குழந்தைக்கு சரியான விகித சத்து கிடைக்கவும், சுகாதார முறையில் கலக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.

இலவச ஸெரிலாக்
புத்தகம் பெற
இம்முகவரிக்கு எழுதவும் :
ஸெரிலாக்,
தபால் பெட்டி எண் : 3
புது டில்லி 110 008.




SAA/FSL/C/3799 (R) TM




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

வந்து குழுமியிருக்கின்றனர். மணிகர்ணிகா, அரிச்சந்திரா என்ற பெயர் கொண்ட இரண்டு இடுகாடுகளிலும், தினமும் நூறு பிணங்கள் எரிகின்றன. அரைகுறையாக வெந்த பிணங்களும், பிராணிகள், குழந்தைகளின் ஒருநூறு சடலங்களும் தினமும் கங்கையில் தூக்கி எறியப்படுகின்றன.

நமக்காக இன்னும் கங்கை எவ்வளவு பாவத்தைத்தான் சுமப்பாள்?

இதைத் தவிர்க்க பிணம் எரிக்கும் மின் உலைகளுக்காக 50 லட்ச ரூபாய் அண்மையில் சாங்ஷன் ஆகியிருக்கிறது. ஆனால் விஞ்ஞான நாளில் இதற்கு முட்டுக்கட்டை என்றால் விந்தையாகத்தான் இருக்கும். எதிர்ப்புத் தெரிவித்து ஆர்ப்பாட்டம் செய்பவர்கள், மயானத்தில் வேலை செய்யும் பரம்பரைத் தோட்டிகள். தங்கள் வருமானம் கணிசமான அளவு குறைந்துவிடும் என்பது அவர்களது வாதம். இவர்களுக்கு அரசியல் ஆதரவும் உண்டாம்!

பாட்னாவிலும் கங்கைக்கரையே பொதுக் கழிப்பிடமாகவும், மயானமாகவும் பயன்படுகிறது. 'டு இன் ஒன்' என்கிறார் என் பீஹாரி நண்பர். இந்த அழகில், நதியாக இருந்தாலும் மனிதர்களைப் போல 'கங்காஜீ' என்று மரியாதை வேறு!

ஆக மனிதனின் முன்னேற்றமும், பேராசையும், மதமும், அரசியலும் சேர்ந்து கொண்டு கங்கையை நாசமாக்குகின்றன. அவளை நாம் வாழ விட்டால்தான், அவள் நம்மை வாழ வைப்பாள் என்பதை ஏன் மறந்துவிட்டோம்?

இன்று நாட்டின் அவசரமான பல திட்டங்களில் முக்கியமான ஒன்று கங்கையைத் தூய்மைப்படுத்தும் திட்டம். கோடிக்கணக்கான செலவில் திட்டம் செயல்படுத்தப் பட்டு வருகிறது. மரங்களை நடுவதற்கும், காடுகளைப் பேணிக் காப்பாற்றுவதற்கும் எத்தனையோ நிறுவனங்கள் முன் வந்துள்ளன. கழிவு நீரைச் சுத்தநீர் ஆக்கிய பின்னரே அது நதியில் கலக்க அனுமதிக்கப்படும். கலை, பரம்பரை, மற்றும் கலாசாரத்தைக் காப்பாற்றும் தேசிய டிரஸ்ட் (National Trust for Art & Cultural Heritage) ஒன்று மக்களிடையே இதைப் பற்றிய விழிப்புணர்ச்சியைப் பரப்பப் பாடுபடுகிறது.

நாகரிகமும், முன்னேற்றமும் புற வாழ்க்கையின் வசதிகளைப் பெருக்குமே அல்லாது, அகத்தைத் துல்லியமாக்குவது தார்மிகச் சிந்தனைகளே. இச்சிந்தனைகளே ஆன்மிகத்துக்கு வழிகோலி வருகின்றன. பாவ — புண்ணிய எண்ணங்கள் இதில் இருந்து பிறந்தவைதான். புண்ணிய நதியான கங்கையின் மாசற்ற ஒரு சொட்டு நீரைப் பருகும் காலம், ஆதிசங்கரரின் வாக்கு மறுபடியும் பலிக்கும் காலம், நமக்குத் திரும்பவும் வர வேண்டாமோ?

— எஸ். டி. ராகவன்.

## வற்றல் போட வாரீகளா?

வெயில் காலம் இதோ இப்போது. இந்த வருடத்திற்குத் தேவையான வற்றல், வடாம் போட வேண்டுமே. அதுவும் வேலை பார்க்கும் இல்லத்தரசிக்கோ இது பெரும் பிரச்னை. வாரத்தில் கிடைக்கும் சனி, ஞாயிறு ஆகிய இரு தினங்களையும் வற்றல் போடப் போகிறேன் என்று அடுப்படியில் நின்று வேகணுமே!

கஷ்டமில்லாமல் வற்றல் போடலாமா?

ஜவ்வரிசியை ஒரு பங்குக்கு 2 பங்கு தண்ணீர் என்ற கணக்கில் ஊற வைக்கவும். பச்சை மிளகாய், பெருங்காயம் இரண்டினையும் மிக்ஸியில் அரைத்தெடுக்கவும். குக்கரில் உள் பாத்திரம் வைத்து, அதில் மேலும் 1 பங்கு தண்ணீர் விட்டு, அதில் அரைத்த மிளகாய் விழுது, உப்பு சேர்க்கவும். தண்ணீர் சிறிது கட்டவுடன் அதில் ஊற வைத்த ஜவ்வரிசியைப் போடவும். ஆவி வந்தவுடன், குக்கர் வெயிட் போட்டு மேலும் சுமார் 10 — 15 நிமிடங்களுக்கு மிதமான தீயில் வைக்கவும். மறுநாள் அத்துடன் சிறிது எலுமிச்சை சாறு சேர்த்து பிளாஸ்டிக் பேப்பரில் ஸ்பூனில் எடுத்துவிட்டு வெயிலில் காய வைத்து எடுத்து வைக்கவும்.

இதே முறையைக் கொண்டு ஜவ்வரிசி கூழ் வடாம் போடுவதிலேயே விதம் விதமாய் செய்யலாம்.

1. வெங்காய ஜவ்வரிசி வடாம்:
   மேற்சொன்ன முறையிலேயே செய்யவும். ப. மிளகாயுடன் ½ கிலோ பெரிய வெங்காயத்தினையும் அரைத்து சேர்க்கவும். சாப்பிட மிகவும் ருசியாய் இருக்கும்.
2. பூண்டு ஜவ்வரிசி வடாம்:
   ¼ கிலோ பூண்டு தோல் உரித்து, ப. மிளகாய், பெருங்காயத்துடன் சேர்த்து மிக்ஸியில் நைசாக அரைத்து மேற்கூறிய முறையிலேயே செய்யவும்.
3. பிரண்டை ஜவ்வரிசி வடாம்:
   பிரண்டையை சிறுசிறு துண்டுகளாக நறுக்கி விழுதாக அரைத்து மேற்கூறியவாறு செய்யவும். இது உடம்புக்கு மிகவும் நல்லது.

— ஜெயஸ்ரீ நாராயணன்.



# என்ன பெயர் வைக்கலாம்?



பெயரில் என்ன இருக்கிறது என்று நினைக்கலாம். ஆனால் ஒருவருடைய பெயர் தான் அவரின் உடைமைகளிலேயே மிகவும் முக்கியமானது. ஸ்கூலில் படிக்கும் பொழுது, காதலிக்கும் பொழுது, கல்யாணம் செய்து கொள்ளும் பொழுது, வியாபாரத்தில், வேலையில் சேரும் பொழுது என்று எல்லா நேரத்திலும் இந்தப் பெயர் ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறது.

குழந்தை, பிறந்ததும் பெற்றோர்கள் அதற்குச் சூட்டும் முதல் பெய கூப்பிடும் பெயர், செல்லப் பெயர் எல்லாமே அவர்கள் அக் குழந்தை எப்படி இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள் என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டு என்கிறார் மனோதத்துவ நிபுணர் எரிக் பெர்ன்.

முதல் குழந்தையின் பெயர் 80 சதவிகிதம் யாராவது உறவினர், தெரிந்தவர்களின் பெயரையே கொண்டதாக இருக்கும். தனக்கு ரொம்பப் பிடித்த சிநேகிதரின் பெயர், மகான், சிறந்த தேசத் தலைவரின் பெயர் என்று ஒரு லக்ஷியத்துடன்தான் அனேக பெற்றோர்கள் பெயர் வைக்கிறார்கள்.

சிலகுடும்பங்களில்தாத்தா, பாட்டி பெயர்களை அவர்கள் உயிருடன் இருக்கும் பொழுது குழந்தைக்கு வைக்கமாட்டார்கள். பெரியவர்கள் பெயரைச் சொல்லி அவர்களுக்கு முன்னால் குழந்தையைக் கூப்பிட முடியாது என்பதனால். ஆனால் தன் கண் முன்னாலேயே தன் பெயர் சொல்ல ஓர் உயிர் உருவாவதை வயதானவர்கள் விரும்புகிறார்கள்.

ஒருவரின் பெயரில் என்னவோ சூட்சுமம் இருக்கிறது என்பதை பெயர் சூட்ட ஆரம்பித்த காலத்திலிருந்தே உணர்ந்தவர்கள் தான், நம் முன்னோர்கள். குழந்தை பிறந்த 11ம் நாள் தொட்டிலிட்டு, புண்யாஹ்சனம் செய்து குழந்தையையும் அதன் பெயரையும் கெட்ட மந்திரம், சூன்யம் அண்ட முடியாமல், சுத்தி செய்து பாதுகாப்பார்கள். தங்காமல் பல குழந்தையை இழந்தபின், பிறந்த குழந்தைக்கு, கண் திருஷ்டி படாமல் இருக்க பிச்சை, குப்பை என்று பெயரிடுவார்கள். அதுபோல் நிறைய குழந்தையைப் பெற்றவர்கள் இத்துடன் போதும் என்று மங்களம், நித்யா என்று பெயரிடுவார்கள். (ஆண் பிள்ளையாக இருந்தால் என்ன பெயர் வைப்பார்கள் தெரியவில்லையே.)

**ஒருவரின் பெயர் அவரை எப்படியெல்லாம் பாதிக்க வல்லது?**

மற்றவர்கள் நம்மை எப்படி மதிப்பிடுகிறார்கள், நம்மைப் பற்றி நான் என்ன நினைக்கிறோம் என்பது எல்லாம் நம் பெயரினால் பாதிக்கப்படுபவை.

ஸ்கூலில் உங்கள் சிநேகிதர்கள் உங்களிடம் பழகும் விதம், ஆசிரியர்கள் உங்களை நடத்தும் விதம் எல்லாமே உங்களின் பெயருடன் தொடர்பு கொண்டதே உங்கள் பெயர் மற்றவர்கள் மனத்தில் விருப்பு, வெறுப்பு, இளக்காரம் போன்ற உணர்ச்சிகளைத் தூண்ட வல்லது.

வேலை மனுவில் ஊர்ப் பெயர், முதல் பெயர், குடும்பப் பெயர் அல்லது அப்பா பெயர், குலப் பெயர் எல்லாவற்றையும் சேர்த்துப் போட்டு, அதற்கு ஒரு கௌரவத்தைக் கொடுக்க முயலுகிறோம்.

திருமணத்திற்கு முன், தன் பெயருடன் தனக்கு நிச்சயித்திருக்கும் பிள்ளையின் பெயரையும் சேர்த்து எழுதி எழுதி பொருத்தம் பார்த்து அழகு பார்க்காத பெண் உண்டா?

ஒருவரின் பெயர் அவரின் குணாதிசயங்களை வாழ்க்கையை எப்படியெல்லாம் மாற்ற

வல்லது என்று விஞ்ஞானபூர்வமாக ஆதாரங்கள் சேகரிக்கப்பட்டு வருகிறது.

அமெரிக்காவில் நியூஜெர்சியிலு, சிகாகோவிலும் உள்ள மனநோய் மருத்துவ ஆராய்ச்சியின்படி விசித்திரமான பெயர் உடையவர்கள் மனநோயால் அதிகப்படியாக பாதிக்கப்படுகிறார்கள்.

ஒருவரின் பெயர் அவரின் ஆரோக்கியத்தையும் பெரிதும் பாதிக்கவல்லது என்கிறார் ஒரு லண்டன் டாக்டர். S இலிருந்து Z—வரை உள்ள எழுத்துக்களால் துவங்கும் பெயர் உள்ளவர்களுக்கு இருதய சம்பந்தமான நோயும், குடல் புண்ணும் அதிகமாக வருகிறது. A—யிலிருந்து R—வரை உள்ள எழுத்துக்களில் துவங்கும் பெயர் கொண்டவர்களைவிட இவர்கள் வாழ்நாள் குறைவாக இருக்கிறது என்கிறார் இந்த டாக்டர்.

சினிமா துறையில் இருப்பவர்களும், கதாசிரியர்களும் தங்கள் பெயருக்கு உள்ள முக்கியத்துவத்தை உணர்ந்து மிகவும் கவர்ச்சியானதாக மாற்றிக் கொள்கிறார்கள். (சில எழுத்தாளர்கள் ஒன்று போறாமல் இரண்டு வைத்துக்கொண்டு இரண்டுவிதமான குணாதிசயங்கள் உள்ள கதைகளை எழுதுகிறார்கள்.)

வியாபாரத்தில் ஒரு புது சாமான் விற்பனைக்கு வருவதற்கு முன்பு அதற்குப் பெயர் சூட்ட நிறைய ஆராய்ச்சி செய்கிறார்கள். சிலவற்றிற்கு ஜனங்களிடையே உடனே ஆதரவு கிடைக்கிறது. சில எடுபடாமல், பெயர் மாற்றி மறுபடி விற்பனைக்கு வருகிறது. (நடிகைகள் ஒரு பெயரில் பிரபலமாக முடியாவிட்டால் மற்றொரு பெயர் வைத்துக் கொண்டு முயற்சிப்பார்கள்.) பெரிய பதவி வகிப்பவர்கள் தங்கள் முழுப் பெயரையும் உபயோகப்படுத்தாமல், சுருக்கி, மாற்றி, initial சேர்த்து, உபயோகப்படுத்துகிறார்கள். இது அவர்களுக்கு ஓர் அந்தஸ்தையும் கௌரவத்தையும் கொடுப்பதாக உணருகிறார்கள்.

முதல் முதல் ஒருவரைச் சந்திக்குமுன் அவரின் பெயரிலிருந்து ஓர் உருவத்தைக் கற்பனை செய்து கொள்கிறோம். அனேகமாக அந்த ஊகம் சரியானதாகத்தான் இருக்கும். எப்பொழுதாவது சில சமயங்களில் தான் இவர் பெயருக்கும் உருவத்திற்கும் சம்பந்தம் இல்லையே என்று தோன்றும்.

ஒரு பெயரைப் பற்றின இந்த முன்பே தீர்மானிக்கப்பட்ட எண்ணம் (preconceived notion) நமக்கு எங்கிருந்து வருகிறது. நம் சொந்த அனுபவங்களிலிருந்து என்கிறார் சிக்மெண்ட் ப்ராய்ட். (இவரின் பெயர் Sigismund ஆக இருந்தது. அது பிடிக்காமல் மாற்றிக் கொண்டார்.) இது தவிர கதை, காவியங்கள், புராணங்கள், சினிமா இவைகளும் பெயர்களுக்கு சில உருவங்களைக் கொடுக்கிறது.

**எப்படிப் பெயர் வைக்கலாம்?**

ஐம்பது வருடங்களுக்கு முன்னால் இன்று போல் இவ்வளவு பெயர்கள் பழக்கத்தில் இருந்து வரவில்லை. தெய்வத்தின் பெயர்கள், உள்ளூர் பெருமாள், தாயார் பெயர், குழந்தையின் தாத்தா, பாட்டி பெயர் இவைகளே திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தன.

ஆனால் இன்று புதிது புதிதாக பெயர்கள் அழகழகாக சூட்டப்படுகின்றன. பெயர் ஒன்றும் புதிதாக ஜோடிக்கப்படவில்லை. கற்பனை செய்யப்படவில்லை. விஷ்ணு ஸஹஸ்ரநாமம், லலிதா ஸஹஸ்ரநாமங்களிலிருந்து ராமாயணம் மஹாபாரதத்

> “பெயர் என்பதும் ஓர் உயிருள்ள ஜீவனைப் போல் மாறக் கூடியது. இன்று பொருந்துவது போல் இருப்பது நாளை பொருந்தாது. ஒரு விளையாட்டு வீரனுக்குப் பொருந்தும் பெயர், ஒரு நடிகனுக்குப் பொருந்தாது. நடிகனுக்குப் பொருந்தும் பெயர், ஒரு பெரிய கம்பெனி டைரக்டருக்குப் பொருந்தாது. அதனால் அவசியமான பொழுது மாற்றிக் கொள்ளவே வேண்டும்.”



# பளிச்சிடும் வெண்மையோ, பாயும் ஒளியோ!






பிஞ் இலவசம்

500 கிராம் 4 ட்ரிலோ வில்லைகள் வாங்கினால்



புதிய ட்ரிலோ டிடர்ஜெண்ட் வில்லை பார்வைக்கு முன்னிலும் கவர்ச்சியானது. ஒரே சலவையில் பல சலவையின் வெளுப்பு. துணிக்கு மேல் துணி துவைத்து அடுக்கினால் கவர்ந்திடும் பளபளப்பு. பார்ப்பவர் கண்களில் பிரமிப்பு. பளிச்சிடும் வெண்மையோ, பாயும் ஒளியோ?

மூன்று குணங்கள் கொண்ட நீல நிற ட்ரிலோ தண்ணீரில் கொழ கொழவென மாறுவதில்லை. ஆகவே துவைக்கத் துவைக்க விரைவில் கரையாமல் நீடித்த சலவை தரும். மேலும், மற்ற பெயர்பெற்ற டிடர்ஜெண்ட் வில்லைகளைவிட 30 சதவிகிதம் செலவு குறைவு. கூடவே, ட்ரிலோ தரும் வெளுப்போ அதி பளபளப்பு. பளிச்சிடும் வெண்மையோ, பாயும் ஒளியோ என்றொரு வியப்பு!

இன்றே ட்ரிலோ வாங்குங்கள், வீட்டுச் சலவையில் வெளுத்து வாங்குங்கள்!

**புதியது**

**ட்ரிப்பிள் ப்ளஸ் ட்ரிலோ** நீல டிடர்ஜெண்ட் வில்லை

Godrej தயாரிப்பு

CHAITRA-B G 395 TAM

திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவையே. அல்லது பெங்காலிப் பெயர், ராஜஸ்தானியப் பெயர் என்று வேறு மாநிலங்களிலிருந்து இரவல் வாங்கியவையே. ஆனாலும் இவை என்ன ஒரு மாறுதலை ஏற்படுத்திவிட்டன. பெயர்களில் ஜாதி மத பேதம் குறைந்து கொண்டு வருகிறது.

சிலர் குழந்தைக்குப் பெயர் சூட்டும் பொழுது வித்தியாசமாக இருக்க வேண்டும் என்று எங்கெல்லாமோ தேடி எப்படியெல்லாமோ பெயர் வைக்கிறார்கள். சில சமயம் காலத்திற்கும், குழந்தையின் குணத்திற்கும் ஒத்து வராமல் இருக்கும் (மண்டோதரி நல்லவள்தான். கற்புக்கரசிதான். ஆனாலும் ராட்சசிதானே? 'மண்டோதரி', குண்டோதரி' என்று சொல்லத் தூண்டும்.) குழந்தை அந்தப் பெயரை ஏற்றுக் கொள்ள முடியாமல் தடுமாறும். மற்றவர்கள் பரிகசிக்கும் பொழுது, தற்காப்புக்காக சண்டை போட வேண்டி வரும். இதனால் எப்பொழுதுமே ஒரு சண்டைக்கார, முரட்டு குணம் ஏற்பட்டு விடும். (விசித்திரமான பெயர் கொண்டவர்கள் மற்றவர்களைவிட நான்கு மடங்கு அதிகமாக சட்டத்தை மீறிய செயல்களைச் செய்பவர்களாக இருக்கிறார்கள்.) கொஞ்சம் கொஞ்சமாக ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு ஒன்றுக்கும் லாயக்கில்லாதவர்களாக ஆகிவிடுகிறார்கள்.

குழந்தைக்குப் பெயர் வைக்கும் பொழுது அதனால் அதற்குப் பெருமை சேர்ப்பதாக இருக்க வேண்டும். அதில் அன்பு தெரிய வேண்டும். உச்சரிப்பில் இனிமை, கம்பீரம் இருக்க வேண்டும். குழந்தையாக இருக்கும் பொழுது மட்டுமல்லாமல், பெரியவனான பின், பெரிய பதவி வகிக்கும் பொழுதும், கௌரவமான உத்யோகம் பார்க்கும் பொழுதும், பொருந்துவதாக இருக்க வேண்டும். ஒருமுறை கேட்டால், மறுமுறை கேட்க வேண்டிய அவசியம் இல்லாமல் மறக்க முடியாததாக இருக்க வேண்டும்.

குழந்தை தன் பெயரிலுள்ள பலம் பலவீனத்துடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளும். இன்றுமனோதத்துவப்படி ஆதாரபூர்வமாகச் சொல்வதை, அன்றே உணர்ந்து தான், பெரியவர்கள் குழந்தைகளுக்கு எல்லா லக்ஷணங்களும், நற்பண்புகளும் பொருந்திய தெய்வத்தின் பெயரையே சூட்டினர்.

எந்தப் பெயர் வைத்தாலும் கூப்பிடும் பொழுது அதைச் சுருக்கியோ மாற்றியோ கூப்பிட ஆரம்பித்துவிடுகிறோம். அல்லது வேறு ஏதாவது சொல்லிக் கூப்பிடுகிறோம். மீனாக்ஷியை மீனா என்றோ, ராஜலக்ஷ்மியை ராஜி என்றோ கூப்பிடுகிறோம். ஆனால் சுலக்ஷணாவை லூலுஎன்றும், தமயந்தியை டோஜோ என்றும் எப்படி மாற்றி விடுகிறார்கள். அதற்கும்மேல் பேபி, பாப்பா, குஞ்சு என்று பல. இப்படிக் கூப்பிடும் பெயர் அன்பை வெளிப்படுத்துவதாக இருக்கலாம். ஆனால் குழந்தை வளர்ந்தபின், அதற்கு அந்தப் பெயர் பிடிக்கவில்லையானால் அதை உபயோகப்படுத்தாதீர்கள். சிநேகிதர்களுக்கு முன் கூச்சமாக இருக்கும்.

இதையெல்லாம் தெரிந்து கொண்ட பின், குழந்தைகளுக்குப் பெயர் வைக்குமுன், உங்களிடம் உள்ள இந்த சக்தியை உணர்ந்து அக்கறை எடுத்துக் கொண்டு பெயர் வையுங்கள்.

— ஜெயா வி. ராமன்.

## எளிதான ஐஸ்கிரீம்



தேவையான பொருட்கள்:

பால் — 1 லிட்டர் (அல்லது தேவைக்குத் தக்கபடி)
மைதா மாவு — சிறு கரண்டியில் இரண்டு கரண்டி (அ) குவியலாக 2 டேபிள் ஸ்பூன்,
சர்க்கரை — 200 மி. லி. கொள்ளளவு கொண்ட டம்ளரில் ஒன்று.
தேவையான கலர், எஸென்ஸ்.

காய்ச்சி ஆறிய பாலை மூன்றில் ஒரு பங்கு எடுத்து மைதா மாவில் சேர்த்துக் கட்டியில்லாமல் கரைத்துக் கொள்ளவும். மிதமான சூட்டில் வைத்து கைவிடாமல் அடிப்பிடிக்காமல் கிளறவும். சேர்ந்து அல்வா போல் வந்ததும் இறக்கவும். அத்துடன் மிகுதியுள்ள பால், சீனி, எஸென்ஸ், கலர்ப் பொடி ஆகியவற்றைச் கலந்து மிக்ஸியில் (அ) எக் — பீட்டரைக் கொண்டு நன்றாக நுரை வரும் வரை கடைந்து ஃபிரிஜ்ஜில் வைக்கவும். 2 மணி நேரத்தில் அருமையான ஐஸ்கிரீம் ரெடி. பாலை குண்டக் காய்ச்சவோ (அ) மிகவும் விலை அதிகமான ஐஸ்கிரீம் பவுடர் போன்றவையோ எதுவும் சேர்க்காமலே இந்த ஐஸ்கிரீம் ருசியாக இருக்கும்.

— வசந்தி.

கேட்பரீஸ்

# போர்ன்விடா

## சுறுசுறுப்புப் பானம்!



"ஒரு டம்ளர் பாலிலே இரண்டு ஸ்பூன் போர்ன்விடா அதுவே நல்மான சுவையான பானம்—அதை, என் குழந்தைகளுக்கு அன்றாடம் இருவேளை தருகிறேன்.

என் குழந்தைகளுக்கு, கோகோ, மால்ட், பால், சர்க்கரை ஆகியவற்றின் போஷாக்கினைத் தருகிறது போர்ன்விடா. அவர்கள் வளரும் காலம் முழுவதும் அவர்களுக்குத் தேவைப்படும் ஊட்டச் சத்தையும் சக்தியையும் அளிக்கிறது. அவர்கள் நல்ல் வளர்ச்சி பெறுகிறார்கள். ஆகவே நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி."

***போர்ன்விடாவின் இனிமைக்காலம். போர்ன்விடா அளித்தவரை பாசமனங்கள் நேசத்தோடு நினைந்து மகிழும் ஒருநாள்.***




இப்போது மிச்சமாக்கிடுவீர் ரூ. 2/- ஒவ்வொரு சீஃபில் பேக்கிலும்.

# தபால் மூலம் சித்திரக்கலை !




படம் வரைய,
வர்ணம் தீட்ட வேண்டுமா?

28 வருடங்களுக்கும் மேலாக, தங்கள்
நம்பிக்கைக்கும், திறமைக்கும் பெயர் பெற்ற

## சந்தனுவின்
## சித்திர வித்யாலயத்தின் மூலம்

தபால் மூலம், தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு,
ஹிந்தி ஆகிய 5 மொழிகளில் வீட்டிலிருந்தபடியே
தங்களின் சித்திர ஈடுபாட்டையும், திறமையையும்
பயனுள்ள முறையில் முன்னேற்றிக் கொள்ளலாம்.

விவரங்களுக்கு 90 பைசா தபால் தலைகளுடன் விண்ணப்பிக்கவும்.

**சந்தனுவின் சித்திர வித்யாலயம்**
C/o. சித்திரக் குள்ளன் (G), 179 சிங்கண்ண தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600 002.

---

"ஆட்டுகல்லு ஆட்டுகல்லுதான்"

## ஆனல், நீங்கள் இதுவரை புதிய சிபிசி பிரீமியர்
## வெட் கிரைண்டரை பார்த்ததில்லை அல்லவா ?



சேர்வகை கிரைண்டர்



சாய்வு வகை கிரைண்டர்

நீங்க சொன்னதும் ஓரளவுக்கு உண்மை தான்-முக்கால் வாசி வெட் கிரைண்டர்களில் மாவு அரைச்சா, ஆட்டுக் கல்லில் அரைச்ச மாதிரி வராது — சிபிசி பிரீமியரைத் தவிர்த்து.

மிகுந்த கவனத்துடன் தயாரிக்கப்பட்ட இது, உங்களின் எல்லாத் தேவைகளையும் மனதில் கொண்டு உருவாக்கப் பட்டுள்ளது.

நல்ல அதிக பளு தாங்கக்கூடிய பால் பேரிங், சீக்கிரம் தேயாத கடினமான கல்லுரல், நீடித்து உழைக்கவல்ல சிக்கனமான சிபிசி பிரீமியர் மோட்டார்,கனமான எவர் சில்வர் பேஸின், குரோமியம் பூசப்பட்ட பாகங்கள், எளிதில் சுத்தம் செய்யக்கூடிய அழகிய கூடு, அசையாமல் உறுதியாக நிற்க குழாய்களாலான கால்கள் இவற்றைக் கொண்டவை சிபிசி பிரீமியர் கிரைண்டர்கள்.

இவை யாவற்றிற்கும் மேலாக : ஒரு வருட உத்திரவாதம்.

கோவை, சென்னை, மதுரை, திருச்சி,விழுப்புரம், கொச்சி, சித்தூர், செகந்திராபாத், பெங்களூர் ஆகிய நகரங்களிலுள்ள கம்பெனியின் கிளைகளிலும், மற்ற இடங்களில் அங்கீகரிக்கப்பட்ட விற்பனையாளர்களிடமும் கிடைக்கின்றன.

**சிபிசி | பிரீமியர்**

புதுமையின் வசதிகளையும், பழமையின் பக்குவத்தையும் ஒருங்கே கொண்டது.

**சிபிசி (பி) லிட்**
கோயமுத்தூர் 641 030

OBM-9365 TM.

# ராசிபலன்

மே '86

மேஷம்



அசுபதி, பரணி, கார்த்திகை முதற் பாதம். எண்ணிய எண்ணங்கள் ஈடேறும் காலம். மே 15 வரை சுப காரியங்களில் ஈடுபடும் காலம். சுகம் ஏற்படும். ஏற்கெனவே கண்ணில் மறைவு இருப்பின் கண் பார்வை கெட வாய்ப்புண்டு. தேக பலம் அதிகரிக்கும். கல்வியில் நாட்டம் கூடும். தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கு சுமாரான முன்னேற்றம், லாபம் கிட்டும். மேற்படி லாபம் குடும்ப காரியங்களில் உடன் விரயமாக வாய்ப்புண்டு. திட வைராக்கிய சிந்தனையுடன் காரியங்களில் ஈடுபட்டு வெற்றி பெறுவர். மே மாதம் 15ம் தேதி வரை எண்ணிய எண்ணங்களில் எவ்விதத் தடையுமின்றி, காரியங்கள் சிறப்பாக முடியும்.

ரிஷபம்



கார்த்திகை 2,3,4, பாதம் முதல் ரோகிணி மிருகசீரிடம் 1,2ம் பாதம் முடிய மேற்படி இராசியில் பிறந்த சாதகர்களுக்கு திருமணம் கூடி வரும் காலம். ஆடை அணிகலன் மற்றும் அலங்காரப் பொருட்கள் வாங்கியணிய வாய்ப்புண்டு. குடும்பத்தில் குழப்பம் சச்சரவு ஏற்பட்டு பின் மாறும். தூரிக மறதி ஏற்படும். அதன் வகையில் பலவித சிக்கல்களை சந்திக்க வேண்டிய சூழ்நிலைகள் உருவாகும். இட மாற்றம், பதவி உயர்வு பொருள் விரயம் ஏற்படும். தாய் வழிப் பந்துக்களால், நல்ல முன்னேற்றமும், ஒத்துழைப்பும் கிட்டும்.

மிதுனம்



மிருகசீரிடம் 3, 4ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 1,2,3 பாதம முடிய. பொருளாதார செழிப்பு ஓங்கும். பிறரால் இச்சாதகருக்கு அவமானத்தைக் கொடுக்க வேண்டும் என்று தொடங்கும் காரியங்கள், இவருக்கு அவ்மானத்தை நல்குவதற்குப் பதில், மிகுந்த புகழ் கீர்த்தியை ஏற்படுத்தும். ஆனல் குடும்பத்தில் நிம்மதி குறைவு ஏற்படும். புத்திரர்களால் நிம்மதி குறைவு ஏற்படும்: சிலருக்கு புத்திர தோஷமும் ஏற்பட வாய்ப்புண்டு. உடன்பிறந்த இளைய சகோதரர்களால் மிகுந்த நன்மை கிட்டும். செய்யும் தொழிலில் மிகுந்த வருமானமும் தொழில் ரீதியில் புகழும் அடைய வாய்ப்புண்டு. கடன்கள் நிவர்த்தியாகும்.

கடகம்



புனர்பூசம் 4ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம்வரை. கல்வி பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் மற்றும் வக்கீல் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கு மிகுந்த மதிப்பும் பொருள் வரவும் ஏற்படும். பூர்வீக சொத்து, பங்கிடுகையில் மேற்படி இராசியினருக்கு குறைந்த பங்கு, சொத்து கிட்டும். சுகக் குறைவு ஏற்படும். முன்கோபத்தால் காரியங்கள் தடை பெற வாய்ப்புண்டு. அரசியலில் ஈடுபாடு கொண்டவர்களுக்கு மிகுந்த நன்மையையும் கீர்த்தியையும் நல்கும் காலம். மன உறுதி அதிகரிக்கும். எதிர்பாராத தன வரவு ஏற்படும். விவசாயிகளுக்கு நன்மைகள் அதிகரிக்கும்.

சிம்மம்



மகம் பூரம் உத்ரம் முதற்பாதம் முடிய. குழந்தைகளுக்கு பெற்றோர்கள் மீது மதிப்பும் மரியாதையும் அதிகரிக்கும். உறவினரிடையே சுமுக நிலை நிலவும். மேற்படி ராசியில் ஜனித்த, சனி பகவான் திசையை தற்போது அனுபவித்து வருபவர்கள் எக்காரியத்திலும் மிகுந்த யோசனைக்குப்பின் இறங்குதல் நலம். எனினும் மிகுந்த பிரச்னையை தரக்கூடிய காரியங்கள் குருபகவான் பார்வையினுல் சூரியனைக் கண்ட பனிப்பால நீங்கிவிடும். வெண்மையான பொருட்களை விற்பனை செய்யும் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கும், கால்நடை கோழிப் பண்ணை முதலான தொழிலில் தொடர்பு கொண்டவர்களுக்கும் மிகுந்த நன்மையை நல்கும் காலமாகும்.

## கன்னி



உத்ரம் 2,3,4ம் பாதம் முதல் அஸ்தம் சித்திரை 1,2 ம் பாதம் வரை. உறவினர் நண்பர்களே பகைவராக வாய்ப்புண்டு. எனினும் இடம் குறைய வாய்ப்பில்லை. மிகுந்த பண விரயம் ஏற்படும். சுப காரியங்கள் பலவித தாமதத்திற்கும், இடைஞ்சலுக்குப்பின் நிறைவேறும். சங்கீதம், பயில்பவர்கள் மற்றும் சொற்பொழிவாளர்களுக்கும், வாய்ப்பு அதிகரிக்கும். பொருள் வரவு கூடும். கணவன் மனைவி உறவில் விரிசல் ஏற்படும். மாணவ மாணவியருக்கு கல்வியில் நாட்டம் குறைந்து, ஞாபக மறதி ஏற்படும். கல்வியில் தடங்கல் ஏற்படும். உத்யோகத் துறையில் உயர் அதிகாரிகளால் நன்மையும் உதவியும் கிட்டும்.

## துலாம்



சித்திரை 3,4ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 1,2,3ம் பாதம் வரை. நீண்ட நாள் எண்ணங்கள் நிறைவேறும். பூர்விக சொத்து கைகூடும் காலம். குழந்தைகளால் குடும்பத்தில் நன்மை சந்தோஷம் ஏற்படும். மேற்படி ராசியில் பிறந்த சனி பகவான் திசையை தற்போது அனுபவித்து வருபவர்கள், பிறரிடம் பேசுவதில் மிகக் கவனத்துடன் நடந்து கொள்ளுதல் நன்று. இல்லையெனில் மிகுந்த கஷ்டத்தை அனுபவிக்க வேண்டி வரும். மேற்படி ராசியில் ஜனித்தவர்களுக்கு விவசாயத்தால் நன்மை மகசூல் அதிகரிக்கும். நவதானிய வியாபாரத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு மிகுந்த லாபம் கிட்டும்.

## விருச்சிகம்



விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை வரை. குடும்பத்தில் சச்சரவும் மனத்தில் சஞ்சலமும் தேக ஆரோக்கியம் பாதிக்கப்படுதலும் ஏற்படும். அரசாங்கத்தில் உயர் பதவி வகிப்பவர்களால் சிற்சில இடையூறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. மனத்தில் உற்சாகம் குன்றி சோர்வு ஏற்படும். தனது வார்த்தையே, முன்னேற்றத்திற்கு தடையாக விளங்கும். மேற்படி ராசியில் பிறந்தவர்களுக்கு தற்சமயம் சனி பகவான் திசை நடைபெறின் எக்காரியத்திலும், மிகவும் கவனத்துடன் ஈடுபடுதல் நன்று.

## தனுசு



மூலம், பூராடம், உத்ராடம் முதற்பாதம் முடிய. தாமதப்பட்டு வந்த திருமணம் நடந்தேறும். அயன சயன போக பாக்கியம் கைகூடும். பூர்விக புண்ணியத்தை அனுபவிக்கும் காலம்; தடைபட்டு வந்த தெய்வ காரியங்கள் சிறப்புடன் நிறைவேறும். மனத்தில் பகைமை காரணமாக கெடுதல் சிந்தங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. குடும்பத்தில் சுப விரயம் ஏற்படும். உஷ்ண சம்பந்தப்பட்ட பீடைகள் ஏற்பட்டு மருத்துவச் செலவுக்குப் பின் குணமாகும். உத்யோகத் துறையிலிருப்பவர்களுக்கு இடமாற்றம் முன்னேற்றம் ஏற்படும்.

## மகரம்



உத்ராடம் 2,3,4. திருவோணம் அவிட்டம் முதல் இரண்டாம் முடிய. மேற்படி ராசியில் பிறந்த ஜாதகரின் புத்திர புத்திரிகளுக்கு மேன்மையான காலம் ஏற்படும். புத்திரர்களால் சந்தோஷமும் நிம்மதியும் கிட்டும். வியாபாரிக்கு தொழிலில் மேன்மையும் விருத்தியும் ஏற்படும். பெண்களைக் கவரும் அழகிய பொருட்களை (Cosmetic) விற்பனை செய்பவர்களுக்கு மிகுந்த லாபம் கிட்டும். மேற்படி இராசியில் பிறந்தவர்களுக்கு மனத்திடம் மன வைராக்கியம் அதிகரிக்கும் காலம்.

## கும்பம்



அவிட்டம் 3,4ம் பாதம் முதல் சதயம் பூரட்டாதி 1,2,3ம் பாதம் வரை. வீட்டிற்குத் தேவையான அலங்காரப் பொருட்கள் மற்றும் நூதனப் பொருட்கள் வாங்கும் பாக்கியம் கிட்டும். கிரகவாகன பூமி சேர்க்கையும், இல்லத்தை அலங்கரித்தலும் ஏற்படும். கலைத்துறையில் ஈடுபடுகிறவர்களுக்கு, இம்மாதம் முதற் பகுதியில் மிக்க மதிப்பும், செல்வாக்கும் கூடும். பெண்களுக்கு மிகவும் திருப்தியை அளிக்கும் காலம். நுண்ணிய கலைச் சிறப்பு மிக்க காரியங்களில் ஈடுபட்டு வெற்றி பெறுவது திண்ணம்.

## மீனம்



பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி ரேவதி வரை. அந்நியரால், நன்மை கிட்டும். ஸ்தல யாத்திரைச் செல்லும் பாக்கியமும் தெய்வ காரியங்களும் நடைபெறும். சுபகாரியங்களில் ஈடுபடுவதின் மூலம் பணச் செலவு ஏற்படும். கல்வி பயிலும் மாணவ மாணவிகளுக்கும், கலைத் துறையில் ஈடுபடுகிறவர்களுக்கும் கல்வி, வித்தையில் நாட்டம் கூடும். எண்ணிய எண்ணங்களை திடச் சித்தத்துடன் செயல்படுத்த முடியும். சகோதர ஒற்றுமை வலுப்பெறும். குடும்பத்திலும், வெளியிலும் மேற்படி இராசியில் பிறந்தவர்களின் வாக்கிற்கு மதிப்பு அதிகரிக்கும்.

# அன்னை ஆசிரமம்



* வீரம்மாள்

திருச்சி நகரின் விமான நிலையத்தைத் தாண்டி, புயல் வேக போக்குவரத்திலிருந்து மீண்டு, தரிசல் நிலத்தில் உபயோகத்திறைல் உண்டாக்கப்பட்ட ஓர் மண்பாதையில் சென்று, குடியிருக்கும் வீடுகளைத் தாண்டி நடந்தால் ஒருவரும் குடிபுகா இடத்தில் இருக்கும் சில கட்டிடங்கள்...!
அன்னை ஆசிரமம் என்ற பெயர்ப் பலகை இருக்கிறது. மூன்று நான்கு வயது குழந்தைகளிலிருந்து, எல்லா வயதுப் பெண்டிரும் இங்கு இருக்கிறார்கள்.

1954ல் திருமதி வீரம்மாளின் முயற்சியினால், சிறு அளவில் தமிழ்நாடு தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பெண்கள் நலச் சங்கம் துவக்கப்பட்டது. சில வருடங்களிலேயே இம்மாதிரியான உதவி அனைத்து வகுப்பினருக்கும் தேவையானதே என்பதை உணர்ந்து இச்சங்கம் 1970ல் ''ஷெட்யூல்ட்'' என்ற வார்த்தையை நீக்கி, ''தமிழ்நாடு பெண்கள் நல சங்க''மாயிற்று.

பெண்களுக்கான தையற் பள்ளி, கைவேலை கற்பிக்கும் வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டு, இன்றும் நன்றாக நடக்கின்றன. 'ஔவை நூல் நிலையம்' ஒன்றும் உள்ளது.

ஒரு சிறிய ரீதியில் துவங்கிய பெண்கள் நலச் சங்கம் தற்போது பூதான நிலத்தில், வினோபா நகரில், பத்து கட்டிடங்களுடன் பல்வேறு நடைமுறைகளில் பெண்களுக்கு நற்பணி செய்யும் இயக்கமாக உள்ளது. இந்த இயக்கத்தைத் துவக்கிய வீரம்மாள், ஆல் இந்தியா ரேடியோவில் 40 ஆண்டுகளுக்கு மேல் பணி புரிந்தபடியால், தனது வருமானத்திலிருந்து 75% இப்பணிக்கு அர்ப்பணித்தார். இந்த உதாரணத்தால் செல்வி காமாட்சியும் 'பி அண்டு டி'யில் தனது வருமானத்தில் பாதியை இச்சங்கத்திற்கு இன்னும் அளித்து வருகிறார். தமிழ்நாடு சமுதாய நலவாரியமும் **(TNSWB)** மத்திய நல வாரியமும் **(CGWB)** இந்நற்பணியை ஆதரிக்கும் வகையில் நன்கொடை **(grants)** அளித்தபடியால் இச்சங்கம் மேன்மேலும் வளர்ந்துள்ளது.

பணம் படைத்தவரும், ஓய்வாக வீட்டிலிருக்கும் பெண்களும் ஏதோ பொழுது போக்குக்கென சிறிய அளவில் செய்வதுதான் சேவை, தொண்டு என்பதைத் தகர்த்தெறிந்தமைக்கு உதாரணமாக விளங்குவது பெண்கள் நலச் சங்கம். வீரம்மாள், காமாட்சி இருவருமே அரசு உத்யோகத்தில் வேலை பார்த்தாலும், சங்கத்தின் வளர்ச்சியில் முழு முயற்சியுடன் முழுமையாக தொண்டாற்றி வருகின்றனர். மேலும், உணவு, உடுக்க உடை, இருக்க இடம் என்ற மூன்றுடன், பாரதியின் 'ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் மேல்' என்னும் நற்சொற்களைக் கடைபிடிக்கத் தோதாய் உள்ளனர்.

— பாமாதேவி ரவி



# சாக்கலேட்-பால், சாக்கலேட்-மால்ட், சாக்கலேட்-ஜமா!

உள்ளும் புறமும் அதுதான் நியூட்ரமுல் புதுப் பேக்.

Amul's
Nutramul
Malted milk food with cocoa

அதி உன்னதமானவற்றை உள்ளிட்ட நியூட்ரமுல் உங்கள் குழந்தையின் அதி உன்னத குணங்களை வெளிப்படுத்தும். சத்துமயமான, சுவைமிகு நியூட்ரமுல்— உள்ளடக்க மதிப்புக்கு அதன் உறைகலனே உரைகல்.

அமுல் படைப்பு

## நியூட்ரமுல்

விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாதாக'



[illegible]
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட., லிட்.,
ஆனந்த்-388 001.



# ஒரு அக்னி குளிர்கிறது

அந்தக் கல்யாணம் நின்றுவிட்டது.

காகிதச் சங்கிலிகளாய் காற்றில் ஊஞ்சலாடிய கனவுகள் அறுந்துவிட்டன. அறுந்த சங்கிலி வளையங்கள் கலர் கலராய் பூமியில் சரிந்து மிதிபட்டன.

நெஞ்சின் நினைவுகளில் குப்பென்று பற்றிக் கொண்ட நெருப்பு வயிற்றில் பந்தாய் கனத்து சுழலலாயிற்று.

இராத்திரி பொழுது போக மாட்டேன் என்று சண்டி பண்ணியது.

எங்கோ மணி ஒன்று அடித்தது.

ஒன்று... ஒன்றரையா? தெரியவில்லை.

ஹாலின் மூலையில் கயிற்றுக் கட்டிலில் அந்த வயதான தந்தை சுருண்டு கிடந்தார்.

மகளின் கல்யாணம் நின்றுவிட்டதே என்ற பதைப்பும், ஐயோ இப்படி ஆகி விட்டதே என்ற ரண வேதனையும்... இனிமேல் நான் என்ன செய்வேன் என்ற கையாலாகாத்தனமும்... பாழும் தெய்வமே இப்படிப் பண்ணிவிட்டாயே அநியாயமாய்...!' என்ற மனக் கூக்குரலுமாய் அவரை மாற்றி மாற்றி உச்சந்தலையில் அடிக்க போராட்டங்களை உள்ளே விழுங்கிக் கொண்டு, இரங்கற் கட்டையாகக் கிடந்தார்.

"என்னம்மா இது! இடியா வந்துடுத்து' ன்னு கதறியவர்தான். அப்புறம் வாயைத் திறக்கவேயில்லை.

அவருக்குத் தெரியும் தன் ஒரே மகளைப் பற்றி...

பத்து வயது வரை துணையோடு அவளை வளர்த்தவர் ஒண்டியாக அவளின் பொறுப்புகளை ஏற்றுக் கொண்ட நாளிலிருந்து இதோ... இருபத்து மூன்று வயது குமரியாகக்

குலுங்கி நிற்கின்றானே... இன்று வரை அவனை அவருக்குத் தெரியும்.

சிம்னிவிளக்கின் வெளிச்சத்தில் அவளின் நிழல் சுவரில் பூதாகாரமாகத் தெரிந்தது.

மெல்ல சத்யா அவள் நினைவில் நிறைந்தான்...

ஒரு நிமிட நேர பரிமாணத்தில் மனுளனுக நெஞ்சில் உருவானவனை அவளால் மறக்க முடியவில்லை...

அவன் அவளைப் பார்த்து விட்டுப் போன நாளிலிருந்து... நேற்று... அந்த அனுமதேயக் கடிதம் வந்ததால்... கல்யாண நிச்சய தார்த்தம் நின்று போய்விட்டதாக... அவள் மாமனுர் என்று கோட்டை கட்டியவர் வந்து சொல்லும் வரை... அவள் மானசீகமாக அவனோடு வாழ்ந்த சந்தோஷங்கள் சடசடவெனச் சரிந்து... நிஜத்தைப் புரிய வைத்த போதும் அவளால் அவனை மறக்க முடியவில்லை.

'க்... க்ளக்...!' எக்கிக்கொண்டு புறப்பட்ட விம்மலை மளக்கென்று விழுங்கினாள்.

'பாவி...! யாருடா நீ... உனக்கு நான் என்ன துரோகம் பண்ணினேன்... நீ நன்னாயிருப்பியாடா... அநியாயமா என் வாழ்க்கையைத் தட்டிப் பறிச்சுட்டியேடா... கிராதகா... சண்டாளா...!''

2

விடிஞ்சு ரொம்ப நாழியாச்சு...

எழுந்து வாசல் தெளிக்கணும் போல இல்லை...

''ம்ச்சு.'' அலுப்பாய் இருந்தது மீனாவுக்கு.

''அ...ப்...பா... காப்பி...!'' இத்தனை நாளாக அவள்தான் அவரை எழுப்புவாள். அவள் முகத்தில் விழிச்சால்தான் அந்த நாளின் பொழுது நன்றாகப் போகும் என்ற அசாத்திய நம்பிக்கையுடன்... அவள் எழுப்பினுல்தான் கண்ணைத் திறப்பார்... இன்று... நேர் எதிராக... அவர் அவளை எழுப்புகிறார்.

அம்மாடி...! ரொம்ப நாக்கு வரள்றது... சூடா காப்பி கலந்து கொடும்மா... நீதானே எனக்குச் சகலமும்.... உன்னிடம் கேட்காமல் யாருகிட்டம்மா கூப்பிட்டுச் சொல்றது...?''

வந்துட்டேம்ப்பா...''

சராசரி வாழ்வின் நியாயமான கடமைகளுக்குப் பதில் சொல்ல மெல்ல எழுந்தாள் அவள்.

வடித்த கடு கஞ்சியில் (சோறு கஞ்சி) நறுக்கிய வாழைப்பூவை போட்டுவிட்டால், வாழைப் பூவில் உள்ள பால் கஞ்சியில் கலந்துவிடும். (கஞ்சி நிறம்கூட மாறி இருக்கும்.) இனி வெண்மையாக சுத்தமாக அலசி எடுத்துக் கொள்ளலாம்.

— முத்துலட்சுமி.

கலைந்த தலையும் தள்ளாடும் நடையுமாய் பின்பக்கம் செல்கிறாள் —

கொஞ்சநேரத்தில் சமையல் உள்ளில் பாத்திரங்களின் ஓசை... வாசற்தாழ் நீக்கும் சப்தம்...நீர் வாசலில்தெளிக்கப்படும்சப்தம். ஃபில்டரில் டிகாக்ஷன் இறங்கும் 'சொட்டு' சப்தம்... பால் பொங்கப் போகும் சுறுசுறு சப்தம்...

''இந்தக் குழந்தையின் பேரில் அவதூறு சொன்னானே... அவன் நன்னாயிருப்பானா? அவன் குடும்பம் ஏழு தலைமுறைக்கு நாசமாய்ப் போகணும்... கூசாமல் அபவாதம் சொன்ன நாக்கு பிறழ்ந்து... கடைசி நேரத்தில் சொல்ல வந்ததைச் சொல்ல முடியாமல் போய்த் தவிக்கட்டும்...

கண்ணாபின்னாவென்று எழுதியகைநரம்பும் சதையுமாகஇழுபட்டுவிரல்களும்நகங்களும் சித்தமில்லாமல் போகட்டும்.''

''அப்...பா!''

''என்னம்மா!''

''வெந்நீர் போட்டுட்டு வந்து உங்களைக் குளிக்க அழைச்சுண்டு போகட்டுமா... நேற்றே... கைகால் அலம்பிண்டதோட சரி... ஜுரம் ஒன்றும் இல்லே.. என்ன சரியா...!''

''வேண்டாம்மா...!''

உச்சிமுகட்டினகட்டைகளைஎண்ண ஆரம்பித்து விட்டார்.

கொஞ்ச நேரத்துக்கு அவரை அசைக்க முடியாது.. என்றுணர்ந்தவளாய் மெல்ல நகர்ந்தாள் மீனா.

3

பெண் பார்க்க மாப்பிள்ளை வந்தார்... வந்தாரே — பெண் பார்க்க மாப்பிள்ளை வந்தார்.

மூளை லாலி பாடி ஆடியது.

அன்று அலுவலகத்துக்கு மட்டம் போட்டாள் மீனா... தன் அருமைத் தோழி... பிராண சிநேகிதி நளினியிடம் மட்டும் மெதுவாக இந்தச் சந்தோஷச் செய்தியைக் காதில் போட்டிருந்தாள்.

சந்தோஷங்களைப் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க முடியவில்லை. அது பகிர்ந்து கொள்ளும் போது இரட்டிப்பாகிறதே!

துக்கத்தைப் பகிர்ந்து கொள்ளும்போது பாதியாய்க் குறைந்து கனமற்றுப் போகிறதே. இது எந்தத் தத்துவத்தின் சட்டம்?

ஊரிலிருந்து வந்த அவளுடைய அருமைச் சித்தி பார்த்துப் பார்த்து அலங்காரம் செய்தாள்.

கேஸரியும்... மைசூர் போண்டாவும் தயாராகின.

கள்ளிச் சொட்டு போல் டிகாக்ஷனை இறக்கிச் சர்க்கரை சேர்த்து நுரை பொங்க ஆற்றி வைத்தாள்.

அடுப்பில் மெல்லியசூட்டில்பால் காய்ந்து கொண்டிருந்தது.

"சித்தி! என்னத்தைக் கட்டிக்கிறது?"

சட்டென்று பெட்டியைத் திறந்து எதற்கும் இருக்கட்டும் என்று கொண்டு வந்திருந்த பட்டுப்புடவையை அவளிடம் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொன்னாள்.

அலங்காரத்தை முடித்துக் கொண்டு நிமிர்ந்த அவள் தோளைப் பிடித்து அழைத்து "அம்மா படத்துக்கு நமஸ்காரம் பண்ணு... போ!" என்றாள்.

"என் கண்ணே பட்டுவிடப் போகிறது!" என்று திருஷ்டி கழித்தாள்.

மௌனமாக, பேசாமல் இத்தனையையும் பார்த்துக் கொண்டு... எங்கு ஓசையிட்டு மகிழ்ச்சியைத் தெரிவித்தால்... அத்தனையும் மண்ணில் கொட்டிய பாலாகி விடுமோ என்று பார்த்து மனத்துக்குள் ரசித்துக் கொண்டிருந்தார் சிவராமன்.

"அவாள்ளாம் வந்தாச்சு" என்றவுடன் விதிர்த்து வியர்த்தவளை...

"என்ன மீனு... ஏன் இப்படி பயப்படற... சாதாரணமா இரு... ஆபீஸ் போற... உத்தியோகம் பார்க்கிற... வெளி உலகம்னா என்னன்னு தெரிஞ்சுண்டவள் இப்படி துளி கூட தைரியம் இல்லாமல் இருக்கியே!"

ஹாலில் வந்து உட்கார்ந்தவர்களை மெல்ல கதவிடுக்கு வழியாகப் பார்த்தாள் மீனு.

தேவேந்திரா புடவையில் பதினெட்டு முழத்தில் ஒரு மாமி... நல்ல சிவந்த நிறத்தில் இருந்தாள். அதிக நகை நட்டு அலங்காரம் இல்லை. நெற்றியில் வட்டமாகக் குங்குமம் பளிரிட்டது. அதற்கு மேலே கீற்றாக விபூதி. சிவனும் சக்தியுமாய் நெருங்கியிருந்தன.

எட்டுக்கல் பேஸரியும் முத்து மூக்குத்தியுமாய் பவ்யமாக இருந்தாள் —

"உன் மாமியாரைப் பார்த்தா ரொம்ப நல்லவளாயிருப்பாள் போலிருக்கு. நீ ரொம்பக் கொடுத்து வச்சவ...!"

கூடவே சம்பந்தி. நெற்றி நிறைய விபூதியும் தேஜஸான முகமுமாய் ஆஜானுபாகுவாகக் கையில் ஒரு தடியுடன் மெல்ல சாய்ந்த நிலையில் உட்கார...

இருவருக்கும் நடுவில்...

வருங்கால மணவாளன்... சத்தியகுமார்...

குபீரென்று பார்வை 'வெளிச்சம்' போட அவள் நெஞ்சில் படமானான்.

தாயைப் போல் நிறம்... தகப்பனைப் போல் திடகாத்திர உடலும், உயரமுமாய்... இருந்தான். தீர்க்கமான நாசியும்... சற்று மேடான நெற்றியும் சுருண்ட தலைமுடியும்... ஆழமான பார்வையுமாய் ரம்யமாக இருந்தான்.

"பெண்டாட்டியை நல்லாப் பார்த்துக் கோப்பா!" கூட வந்திருந்த வெகுளியான மூத்த சகோதரி சின்னதாகக் கேலி செய்ய... அவன் அவளைப் பார்க்க... அவளும் தன் விழிகளை உயர்த்த...

"நல்ல நாள் பார்த்து சொல்லியனுப்பறோம். நிச்சயதார்த்தம் வச்சுண்டுடலாம். தைமாத முதல்ல முகூர்த்தம் வச்சுடுங்கோ!"

மஹாலிங்கம் மனம்விட்டு சாதாரணமாகப் பேசினார்.

துரு பிடித்து பழையன போல் தோற்றமளிக்கும் இடியாப்ப அச்சு, சாரிணி, அரிவாள்மனை போன்ற இரும்பால் ஆன கருவிகளை மாட்டுக் கழுநீர் தண்ணீரில் சுமார் ஆறு மணி நேரம் மூழ்க வைத்து எடுத்துப் பாருங்கள். புத்தம் புதிது போல் தோற்றமளிக்கும்.

— முத்துலட்சுமி.

எல்லாம் இனிதாக முடிய...

"எனதருமை தம்பிப் பெண்டாட்டியே... நாங்கள் கிளம்பறோம்!" ஜெயா கலகலக்க.

"நான் வரேன் மீனு!" மாமி விடைபெற்றுக் கொண்டாள்.

மஞ்சள், குங்குமம், தேங்காய் என கைநிறையத் தாம்பூலம் கொடுத்தாள் சித்தி. மெல்ல நிமிர்ந்து தலை அசைத்த மீனு மறுபடியும் ஒருமுறை நமஸ்கரித்தாள்.

வாஞ்சையோடு அந்தப் பெண்ணைத் தூக்கி நிறுத்தியவளாய் மெல்ல அவளை அணைத்துத் தலையைக் கோதி,

சின்னதாக அவள் உச்சியில் சரமில்லாமல் மென்மையாக முத்தமிட்டபோது —

"அம்மா சாகல... இதோ... திரும்பி வந்துட்டா...!"

விழியோரக் குளங்கள் நிரம்பி வழிந்தன...

"அத்தனையும் பொய்யாப் போச்சே...

இப்படி ஒரேயடியாக சறுக்கி விழத்தான் அன்னிக்கு அப்படி கோடிச்சு உயரத்திலே கொண்டு போய் நிக்க வச்சியா!"

சின்ன மனத்தின் மணிகள் குலுங்கின.

## 4

ஞாயிறு காலை எட்டு மணிப் பொழுது அன்று இன்பமாகத்தான் இருந்தது. மெதுவாக எழுந்திருந்து நுரை பொங்கும் காப்பியை ருசித்துச் சாப்பிட்டு... கொஞ்சம் சோம்பேறித்தனமாக உட்கார்ந்து, லேசாகக் கற்பனையில் மிதந்து, கல்யாணமாகி போயிட்டா அப்பா தனியாகக் கஷ்டப்படுவாரே என்று கவலைப்பட்டு,

வாசற்கதவு தட்டப்படும் சப்தம் கேட்டது.

சட்டென்று தலை துண்டை எடுத்துப் போட்டுவிட்டு நீண்டு தொங்கிய முடியை துணியில் முடிச்சிட்டு வாசற்கதவைத் திறந்தாள்.

எதிரே... மஹாலிங்கம்...

அவரைப் பார்த்த நேரத்திலே சட்டென்று மனத்திலே பரவசம் பொங்கியது. சுதாரித்துக் கொண்டவளாய்...

"வாங்க! வாங்க!" வழிவிட்டுக் கதவை நன்றாகத் திறந்தாள்.

"உட்காருங்க!"

வெட்கம் மேலிடச் சட்டென்று ஓடியவள் "அப்பா... மாமா வந்திருக்கார்!" என்று உள்ளே ஓடினாள்.

குழந்தைத்தனக் குரலும், சந்தோஷமும், அடக்கமான ஆர்ப்பரிப்புமாக...

அவள் பேசுவதை மஹாலிங்கம் கேட்டுக் கொண்டுதான் இருந்தார்.

அங்கு பாவியிருந்த புனிதமான சூழல் அவர் நெஞ்சில் நிறைந்தது.

பாலா திரிபுரசுந்தரி பவழ மல்லிகை மாலை சார்த்திக் கொண்டு புன்முறுவல் பூத்த கோலம்...

தரையில் போடப்பட்ட கோலத்தின் நேர்த்தி...

விளக்கைப் பளிச்சென்று தேய்த்து மஞ்சள் குங்குமம் இட்டு விளக்கேற்றியிருந்த அழகு...

மனது வலித்தது...

"பகவானே..." மனது இறுகிக் குத்து வலியாகத் தைத்தது —

சுடச்சுட நுரைபூத்த காப்பியைக் கொண்டு வந்து வைக்கவும்... தலையைத் துவட்டிக் கொண்டே சிவராமன் வரவும் சரியாக இருந்தது.

"வரணும்...! வரணும்...!" அவர் குரலில் சந்தோஷம் பூத்துச் சொரிந்தது.

எப்படி ஆரம்பிப்பது?

'இது என்ன சோதனை... தெய்வமே! மஹாலிங்கத்தின் தொண்டை அடைத்தது. எதுவுமே இறங்கவில்லை...

'ஏதும் பேசாமல் ஏன் இப்படி இருக்கிறார்? — மனத்திலே ஒரு முள் ஓங்கி நெருட... நிமிர்ந்தவரை மஹாலிங்கத்தின் சோபை யிழந்த வெளுத்த முகம்... தட்டி நிறுத்த... என்னவோ ஆயிடுத்து...?

"மாமிக்கு உடம்பு சரியில்லையா?" பதறிக் கொண்டு வந்தன வார்த்தைகள். மெதுவாகத் தலை அசைத்தவர்,

பேசாமல் இருக்க முடியாது — பேசித்தான் ஆகணும்... சொல்லித்தான் தீரணும்...

"இந்த நிச்சயதார்த்தத்தை ஒரு ஆறு மாசம் ஆறித்து வைச்சுக்கலாம்னு யோசனை"

ஏதோ அசௌகர்யம் போலும். அதுதான் தினறுகிறார் என்று எண்ணியவாறு, "அதுக்கென்ன? உங்க சௌகரியம்.. அவ உங்க நாட்டுப் பெண். எப்ப செய்யணும்னு சொல்றேளோ... நடத்தலாம். அம்பாள் அனுக்ரஹம் அப்படி...!"

"ம்ஹூம்... உறவுன்னு கொண்டாடத் தீர்மானம் பண்ணி... நிச்சயம் பண்ண வரும் வரை வந்தபின்... பொய் அசிங்கமென்று படுகிறது — "

"நீங்க என்ன சொல்றேள்.. புரியலையே!"

"இதைப் பாருங்கோ... புரியும்... பின்னால் தப்புப் பண்ணிட்டோம்னு வருத்தக்கூடாதுங்கறதுக்காகத்தான் இந்த போஸ்ட்போன்மெண்ட். எனக்குக் கொஞ்சம் அவகாசம் வேணும். இந்தக் கடிதம் நல்லவேளையாக என் கையில் கிடைச்சது. மாமிக்குத் தெரியாது. அவனுக்கு மட்டும்தான் தெரியும். அவசரப்படாமல் நிதானமாக அவளுக்குச் சொல்லிப் புரிய வையுங்கோன்னுதான் சத்யா சொன்னான் — அவனே வந்திருப்பான். நான்தான் வேண்டாம்னேன். உங்களுக்குச் சங்கடமாயிருக்கும் பாருங்கோ! அதுக்காகத்தான்!"

"என்ன இது...?" மிரண்டு பார்த்தனர் தந்தையும் மகளும்.

"படிச்சுப் பாருங்கோ."

கடிதத்தைப் பிரித்தார் —

மெல்ல படிக்கப் படிக்க...

"பாகி... என்னடி சோதனை இது... என்னால தாங்க முடியலையே...!" கீழே அப்படியே... மஹாலிங்கத்தின் காலடியில் உட்கார்ந்துவிட, மெல்ல அவரைத் தூக்கி ஆதரவாக அணைத்துக் கொண்டு தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார்.

—இது வெறும் போஸ்ட்போன்மென்ட்



இல்லை... நிச்சயமாகவே நின்றுவிட்டது — என்ற அச்சமும் பயமுமாக...

''ஏதோ அசம்பாவிதம்...'' உள்ளுணர்வு எச்சரிக்கத் தகப்பனின் கையிலிருந்ததை வாங்கிப் படித்து...

அப்படியே சிலையாகச் சரிந்து...

மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தது தான்... நிஜமாய் நடந்த ஒன்றாயிற்று.

## 5

''மீனு!''

''ம்... ம்...!''

''அந்த கடுதாசியை எடேன்!''

மெல்ல நிமிர்ந்து பார்த்தாள்.

எதுக்கப்பா அந்த சனியன் இப்ப...?

உண்மையென்ற ஒன்றின் கலப்பு இல்லாமல் எவனோ ஒரு வேலையத்த வக்கிரம் பிடிச்சவன் தன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்க... ஒருசாடிஸ்ட் எழுதியஎழுத்துக்கள்...கொதிக்கும் சயத்தில் முக்கிய அச்சு கோவைகள்.

''என்...னம்மா! பேசாமல் பாக்கறே... அதைக் கொண்டா. மறுபடியும் படிச்சுப் பாக்கறேன். யார் எழுதியிருப்பா இதை... ஏதாவது அடிபடறதான்னு யோசனை பண்றேன்.



பேசாமல் மௌனமாக... ஸ்வாமி படத்தின் பின்னால் செருகி வைத்திருந்த அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள் மீனு.

குபுகுபுவென வயிறும் நெஞ்சமும் எரிய வாசற்கதவைத் தாழ்போட்டாள். தகப்பனருகில் போய் முன்னால் மடிந்து உட்கார்ந்தாள்.

ஓசையின்றிப் பெருகிய கண்ணீர் புடவையை நனைக்க... அவள் குலுங்கினாள்...

''பாவி... நீ நன்னாயிருப்பியா! அழிஞ்சு தான் போவே!''

மெல்ல அதைப் பிரித்தார் சிவராமன்.

திருவாளர் மகாலிங்கம் அவர்களே!

ஓர் உண்மைச் செய்தியை உங்களுக்கு எழுதுவது என் கடமை என நினைக்கிறேன்.

தங்களின் வருங்கால மருமகள் மீனலோசனி... பாஸ்கரன் என்பவனின் கனவுக்கன்னி.

அவனும் அவளும் அத்யந்த காதலர்கள்; அவர்கள் காதல் ஆழமானது. அடுத்தவன் காதலியைத் தங்கள் மகனுக்கு மணமுடிப்பது நல்லதல்ல. இதனால் உங்களுக்கு அவமானம்தான் மிஞ்சும்.

அன்பரே......

மாற்றான் தோட்டத்து மல்லிகையை மறந்துவிடுங்கள்.

உண்மை விளம்பி.

''கதவை தாழ் போட்டுவிட்டாயாம்மா!''

''போட்டாச்சுப்பா!''

''அம்மா... யாரும்மா அந்த பாஸ்கர்...?''

சொந்த பெண்ணையே... விசாரிக்கும் நிலை... ஒரு தகப்பனுக்கு வந்தது பெரிய அவபாக்கியம்.

தகப்பன் என்ற பதவியின் கடமை உணர்வு அவரைப் பேச வைத்தது. ''சொல்லும்மா! அந்த பாஸ்கர் யாரு?''

''ம்... என் செக்ஷன்ல இருக்காம்பா... போன வருஷம்தான் திருச்சிலேந்து டிரான்ஸ்ஃபர் ஆகி வந்தாம்பா!''

''இதுலே என்னவோ எழுதியிருக்கே.... படிக்க வாய் கூசுகிறதே... அந்தப் பையன் எப்படிம்மா ... நல்லவனா?''

மெல்ல எச்சிலைக் கூட்டி நிமிர்ந்தாள்.

சொல்ல வேண்டிய நேரம் வந்துடுத்து... இனிமேல மறைத்துப் பிரயோசனம் இல்லை... உண்மையை ஒப்புக் கொள்வது தான் உத்தமமான செயல்.

வந்து சேர்ந்த முதல் நாள்.. ரொம்ப பவ்யமாகப் பழகினான். மேடம், மேடம்னு சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டான்...

அப்புறம்தான் அவன் ஸ்வயரூபத்தை காட்ட ஆரம்பித்தான். அவனுடைய அத்து மீறிய பேச்சில் எனக்குக் கோபம் வரத்தான் செய்தது. அதை குப்பையா கொட்டறதுல என்ன லாபம்னு பொறுமையாக இருந்தேன்.

லெட்ஜர்களை வாங்கும் சாக்கில் விரல்களைத் தடவுவதிலும்... சந்தேகம் கேட்கும் சாக்கில் மேலே உரசறாப்பல திரும்பறதும்... யாரும் இல்லாத நேரத்தில் காலை மிதிப்பதும், திருடுவதுமாக.... ஆரம்பித்தான்...

எனக்குப் புரிந்துவிட்டது.

இவன் ஒரு பக்கா அயோக்கியன் என்று. ஒவ்வொரு முறையும் அவனின் செயல்களை நான் பெரிதாக எடுத்துக் கொண்டாலும் அதைப் பகிரங்கப்படுத்தி நாலு பேர் முன்னிலையில் அவனை அவமானப்படுத்த விரும்பவில்லை.

அவன் ஒரு முறை கோணல் மாணலாக எழுதிய துண்டுக் கடிதத்தைக் கூட நளினி கிட்ட காண்பிச்சு அழுதிருக்கேன்.

அதை சுக்கு நூறா கிழிச்சுப் போடப் போனப்ப...

அவள்தான், 'இது என்னிடம் இருக்கட்டும்... பின்னால் ஒருவேளை தேவைப் படலாம் என்றாள்.

இரண்டு பிள்ளைகளுக்குத் தகப்பன் அவன்....

சம அந்தஸ்து கொடுத்து பொம்மனாட்டியை நல்ல சிநேகிதியாகப் பார்க்க யாருக்குமே பிடிக்கிறதில்லை... அப்பா! என் அழுகை

நூறு கிராம் கேரட்டைத் தண்ணீரில் அலம்பி, தோல் சீவாமல், தேங்காய்த் துருவலில் துருவிக் கொண்டு, அத்துடன் சிறிது உப்பு ½ கப் தயிர் விட்டு சாப்பிட்டுப் பாருங்கள். அந்தச் சுவையை எதனுடனும் ஒப்பிட முடியாதபடி தனி ருசியுடன் இருக்கும். குழந்தைகளுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கலாம்.

பெரியவர்கள் தேவையானால், ஒரிரு பச்சை மிளகாய், சிறிது கொத்தமல்லித் தழையுடன் சேர்த்து தயாரித்துக் கொள்ளலாம்.

— திருமதி தேவநாதன்.

நீங்கள்...
தரமான பொருளைப் பெற அதிகமாக
செலவு செய்கிறீர்களா?
அல்லது மட்டமான பொருளே போதும்
என்று இருந்து விடுறீர்களா?

# பிஜ் கொண்டு அதை மதிப்பிடுங்கள்

### விலையிலே

பிஜ், சிறந்த முறையில் சிக்கனம் மற்றும் தரம் இரண்டையும் பிணைக்கிறது. உண்மையில், பிஜ் அளிக்கும் சிக்கனம் இருதரப்பட்டது. இதோ கண்டுகொள்வீர்—இதர நன்கறிந்த துலக்கும் பவுடர்களைவிட பிஜ் 25% குறைந்த விலை கொண்டது. அத்துடன், மட்டமான துலக்கும் பவுடர்களைவிடக் குறைந்த அளவே பிஜ் போதும் மாசற்ற பளபளப்பு வீசுவதற்கு.




### செயல்திறனிலே

எவர்ஸில்வர் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், வாஷ் பேஸின்கள், எவற்றிலிருந்தும் ஸூப்பர் பிஜ், கறைகள், கசடு, பிசுக்கு இவற்றை தீவிரச் செயல் புரிந்து நீக்கி விடுகிறது. விரைவில் நுரைவளம் பெருகும் திறனுள்ள நாசுக்கான பாகங்களையும் சொரசொரப்பான பாகங்களையும் மேன்மையாகவும், எளிதாகவும் சுத்தம் செய்கிறது. பல-வித உபயோக பிஜ் இருக்கையிலே வெவ்வேறு துலக்கும் தேவைகளுக்கு விலை அதிகம் கொடுத்து வெவ்வேறு பவுடர்கள் வாங்குவானேன்? உயர்ந்த சேமிப்பு மற்றும் உயர்ந்த செயல்திறன்—இவை சரியான அளவில் இணைந்த பிஜ் வாங்குவீர்.

கோத்ரெஜ் தயாரிப்பு

## விலையோ குறைவு, தரமோ உயர்வு

CASGS-163-183TM

இது வடாம் இடும் சீஸன். வடாம் இடுவதற்குத் தேவையான பச்சை மிளகாய், உப்பு, பெருங்காயம் இவற்றை மொத்தமாக 'கிரைண்டர்' (அ) மிக்ஸியில் நைசாக அரைத்து அந்த கலவையில் எலுமிச்சம்பழச் சாற்றைகொட்டையின்றி வடிகட்டி கலந்து வைத்துக் கொண்டு, ஒவ்வொரு நாளும் வடாம் இடும்போது தேவையான அளவு இந்த கலவையை சேர்த்து இடலாம். இந்த கலவை பிரிட்ஜில் 10(அ) 15நாட்கள் வரை கெடவில்லை.

— டி. விஜயலட்சுமி.

மனசுல தேக்கி அவன் எழுதிய எழுத்துக்களை பார்த்துப் பார்த்து நான் சந்தோஷப் படவில்லே. மனசுக்குள்ளே குறுகி கூனி போயிட்டேம்பா... பளிச்சென்று ஒருபுடவை கட்டிக்க... ஒரு முழம் பூ வைச்சுக்க கூட எனக்குப் பிடிக்காமப் போயிடுத்துப்பா... ஆனால்... அவன் மனத்தில் பூனையின் சீறலும் நாயின் மூர்க்கமுமாய் இப்படி ஒரு வெறி மண்டிக் கிடந்திருக்கும்னு நான் எதிர்பார்க்கலப்பா...!''

''என் மனசுல எந்த நீசத்தனமும் கிடையாதுப்பா... சட்டென்று எகிறிப் பேச எனக்குத் துணிச்சல் இல்லேப்பா... நான் ஒதுங்கி போயும்... விதி என்னை விடலப்பா...!''

அத்தனையையும் கொட்டியவள் விக்கி விக்கி அழலானாள். நகங்கிய மனது ஓசையிட்டு அழுதது.

''அழட்டும்... அழுவது மட்டும்தான் இப்போதைக்கு அவுட்லெட்!' என்றபடி தன் செல்லப் பெண்ணை... தாயில்லாத அந்த அபலையை... மெல்ல அணைத்துக் கொண்டு முதுகில் ஆறுதலாகத் தட்டிக் கொடுத்து,

''அழாதேம்மா. அழாதே... உன் கண்ணீருக்கு அவன் பதில் சொல்ற காலம் வராமல் போகாது... பெண் சாபம் பொல்லாதுன்னு கடைசியில உணருவாம்மா... அம்பாள் துணையிருப்பா...''

6

''மிஸ்டர் சிவராமன் எழுந்திருங்கள்!''

மெல்ல அவர் பக்கத்தில் உட்கார்ந்து அவர் எழுந்து கொள்ள வாட்டமாகக் கையை பிடித்துத் தூக்கிவிட்டார் மஹாலிங்கம்.

உங்களுக்கு உடம்பு சரியில்லேன்னு கேள்விப்பட்டுஓடிவந்துபார்த்தால்...இப்படி நடைபிணமாக ஆகிவிட்டீர்களே...

கையில் கிடைக்கவிருந்த உத்தமமான வாழ்வு தட்டிப் பறிபோய் விட்டதே என்ற சூழ்விரக்கத்தில்...

''மாமா... இதுதான் நடந்த நிகழ்ச்சி... அந்தக் கடிதத்தில் எழுதி இருப்பது அப்பட்டமான பொய்... எந்த அபவாதமும் நான் செய்யல!''

சின்ன கேவல்கள்... பெரிய விசும்பலாக அப்படியே... ஹோவென்று அழுதவளாய் அவர் காலடியில் விழுந்தவள்...

''ஹோ...!'' வென்று அழலானாள்.

'இவர்கள் இருவருக்கும் நான் எப்படி ஆறுதல் சொல்லப் போறேன்...!' கொஞ்சம் கலங்கினாலும் தீர்மானமாக அவளையும் உட்கார வைத்துப் பேசலானார் மஹாலிங்கம்.

''அம்மா! மீனாட்சி... இதுக்காக... இப்படி ஒரு கடுதாசி வந்ததுக்காக அப்படியே இடிஞ்சு போயிடாதே... தைரியமாக இருக்கணும்... துணிவு தாம்மா பெரும் துணை. இது வெறும் கடுதாசி... கொழுப்பெடுத்தவன் கையில் ஒரு பேனாவும் தாளும் கிடைச்சுது. அவன் தன் மனசு போல எழுதியிருக்கான்.

இந்தக் காலத்துப் பெண் குழந்தைகள் ரொம்ப பாவம் பண்ணினதுகள் — அம்மா! உலகமே நாறிண்டிருக்கும்மா... அந்த நாத்தம் பெண்களை மட்டும் நாசப்படுத்தறது...

நீ சமாளிச்சுக்கணும். சத்யாவும்வரேன்னு தான் சொன்னான். நான்தான் வேண்டாம்னுட்டேன். என்னைவிட அவன் விபரமா புரிஞ்சுக்கறாப்பல சொல்லுவான். ஆனால் அவன் வந்தால் உங்களுக்கு இரண்டுங்கெட்டானா இருக்கும்.''

''இப்பவும் உங்கப்பாவுக்கு உடம்பு சரியில்லேன்னு கேள்விப்பட்டவுடன் எங்களுக்குத் தாங்கலே... ஒரு நடை வந்துட்டுப் போகணும்னுதான் ஓடிவந்தேன்...

''இப்பவும் விதி போட்டிருந்தா நீதான் எங்க விட்டுப் பெண். என் நிலைமையை நீங்கள் புரிஞ்சுக்கணும். இந்தக் கால தவலை எந்த விதத்திலும் துப்பு துலக்க இல்லேங்கறது மட்டும் உறுதி... உங்கப்பா நிலையில நான் என்னை வச்சுப் பார்க்கறேன். நானும் ஒரு பெண்ணைப் பெற்றவன்தான். அம்மா! நான் கிளம்பட்டுமா!'' என்று எழுந்தார் மஹாலிங்கம்.

வேறு வழியில்லாமல்...

இவர் கிளம்பிவிட்டாரே என்ற மனத்தாங்கலே மூடிப் புதைத்து... வழி அனுப்ப சிவராமனும், மீனாவும் எழுந்து வாசல் வரை சென்று... அனுப்பி வைக்க... அவர் தலை மறையுமட்டும் பார்த்துக் கொண்டிருந்தவர் உள்ளே வந்ததும் கதவை சாத்தி தாழிட்டவராய்...

'ஓ'வென நடுக்கூடத்தில் விழுந்து கதறினார்.

''அ...ப்பா... நான் ஒரு தப்பும் பண்ணலப்பா!'' என சின்னக் குழந்தையாய் அவள் அரற்ற... கடிகாரத்தின் முட்கள் ஒன்றுடன் ஒன்று சந்தித்து மீண்டு கொண்டிருந்தன.

7

தொடர்ந்து மூன்று நாட்களாக மீனா அலுவலகத்திற்கு வராததைக் கண்ட நளினா இனிமேல் என்னால் தாங்க முடியாது என்பது போல் மறுநாளே லீவ் அப்ளை செய்து விட்டு நேரே தோழியின் வீட்டிற்கு வந்தாள்.

''மீனா!''




# GOPI Kitchen Machine




"சமையலறையில் எனக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்கிறது கோபி. ஏன் தெரியுமா?

கோபி மெஷினுடன் நவீன தொழில் நுட்பத்தையும், எந்தவிதக் கூடுதல் செலவின்றி, ஒன்றல்ல மூன்று ஜாடிகளும் கிடைக்கின்றது.

ஆகவே ப்ளெண்டிங், ட்ரை க்ரைண்டிங், வெட் க்ரைண்டிங், அல்லது எது வேண்டுமானாலும் கோபியில் மட்டுமே நொடிகளில் செய்ய முடியும். கூர்மையான பிளேடுகளைக் கையாளுதல் போன்ற தொல்லை எதுவும் இல்லை.

ஒவ்வொரு ஜாடியையும் தனித் தனியாக உபயோகிக்கலாம். அவற்றை தனித் தனியாக வாங்க வேண்டிய அவசியமில்லை. அதனால் எவ்வளவு பணம் மிச்சப்படுகிறது தெரியுமா!

கோபி மெஷின் மிகவும் சிறந்தது. அதனால் தான் உங்களுக்கு 5 ஆண்டு உத்தரவாதமும் (மோட்டார் உள்பட) ஆயுள் முழுவதும் இலவசச் சேவையும் கிடைக்கின்றன.

ஒரு பெண்ணுக்கு இதைவிட வேறென்ன வேண்டும்? கோபி இருக்கும்போது நான் சமையல் கலை வல்லுனராகவே உணர்கிறேன்"

கோபியை இப்பொழுது உங்களுக்கு 'தெர்மாகோல்' பேக்கிங்குடன் அளிக்கின்றோம். தெர்மாக்கோல் பேக்கிங்கை 1) ஹாட்கேஸ் 2) ஐஸ் பாக்ஸ் 3) பிக்னிக் கேஸ் ஆக உபயோகிக்கலாம்.

கர்நாடகா, ஆந்திரா மற்றும் தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்

## திரிப்தா மார்கெட்டிங் பி. லிட்.,

139, பாரதி சாலை (பைக்ராப்ட்ஸ் ரோடு) சென்னை-600 014 போன்: 88599

தமிழ்நாட்டில் உள்ள சர்வீஸ் சென்டர்கள் முகவரிகள் :-

**சென்னை:** திரிப்தா மார்கெட்டிங் பிரைவேட் லிமிடெட், 139, பாரதி சாலை, பைகிராப்ட்ஸ் ரோடு, இராயப்பேட்டை, தொலைபேசி 88599 ஸ்ரீ பாலாஜி ஹோம் நீட்ஸ், 2 வடமலை மேஸ்திரி தெரு, போன் 39526; **கோயம்பத்தூர்:** கோபால் அசோசியேட்ஸ், 9 ஜுவலர்ஸ் பவன், 27, T. B. ரோடு, தொலைபேசி 25997; **மதுரை:** ஆனந்தம் எண்டர்பிரைசஸ், 13 கிழக்கு மாசித் தெரு, தொலைபேசி 23377; **சேலம்:** ஸ்ரீ காமதேனு டிரேடர்ஸ், 39 பஜார் தெரு, தொலைபேசி 7524; **திருச்சி:** சித்திக் சேல்ஸ் கார்பரேஷன், 32 இரண்டாவது தெரு, [illegible] காலனி, மன்னார்புரம், தொலைபேசி 31727; **வேலூர்:** நவீன் டிரேடர்ஸ், 324, C.S.I. காம்ப்ளெக்ஸ், ஆபீசர்ஸ் லைன், தொலைபேசி 23443; **கும்பகோணம்:** மூர்த்தி ரேடியோஸ், 144, பெரிய தெரு, கும்பகோணம் 612 001; **பாண்டிச்சேரி:** N. சங்கர்தாஸ், N. கோபால் பிரதர்ஸ் & கோ, 579 & 80, ஜே. நேரு தெரு, Phone 4513

இந்தியா முழுவதும் சர்வீஸ் சென்டர்கள் உள்ளன

வெறுமனே சாத்தியிருந்த கதவு கைவை வைத்ததும் திறந்து கொண்டது. ஊஞ்சலில் சிவராமன் படுத்திருந்தார். கீழே மீனு... 'அம்போ!' என உட்கார்ந்திருந்தாள்! பக்கத்தில் ஒரு டம்ளரும் ஒரு பாத்திரமும்....

''அப்பாவுக்கு உடம்பு சரியில்லையா என்ன?'' கொக்கி கேள்விகள் நெஞ்சை நெருட,

நளினியைப் பார்த்த மீனு... வாயைத் திறந்து வா என்று கூட கூப்பிடத் தோன்றாமல் அவளையே பார்த்தபடி இருக்க...

கல்யாண சந்தோஷம் எதுவுமில்லாமல்... என்னவோ நடந்த வீடு மாதிரி அந்தச் சூழ்நிலை அவளை சங்கடப்படுத்த.

''என்ன மீனு, உன் முகமும் பார்வையும்... வாட் ஹேப்பன்ட்...ம்மா!''

மீனுவின் முகம் இறுகிச் சிவக்க...

''அப்பா! என்னப்பா உடம்பு சரியில்லையா?'' என்று கையில் மறக்காமல் வாங்கி வந்திருந்த திராட்சை பழக் கவரை அவரிடம் கொடுத்தாள்...

''வாம்மா...! உட்கார்!''

அதோடு அவரும் வாயை மூடிக்கொள்ள...

இதென்ன மௌனமான மல்யுத்தம்.

அப்பா...! என்ன ஆச்சு உங்களுக்கு? என் சின்னப் பெண்ணே!ன்னு வாய் நிறைய கூப்பிட்டுப் பிரியமா பேசுவேளே... ஏன் இப்படி இரண்டு பேரும் உம்முனு இருக்கேள்... என்ன ஆச்சுப்பா... அடுத்த வாரம் நிச்சயதார்த்தம்னு மீனு சொன்னாளே...!''.

அதற்கு மேலே மூடி வைக்கத் தெரியவில்லை அந்தப் பேதை மனசுக்கு. மடை திறந்த வெள்ளமாய், பிரவாகமாய் நுங்கும் நுரையுமாக... சுழித்துக் கொண்டு, குப்பையும் கூளமுமாக...

அப்படியே ஸ்தம்பித்து விக்கித்து நின்றாள் நளினி...

சிவராமன் மாற்றி மீனு... மீனு மாற்றி சிவராமன்... மாறி மாறி நடந்தது அத்தனையையும் சொல்ல... பார்த்தறியாத மஹாலிங்கம் மனத்தில் நிறைந்து நின்றார். நம்பிக்கை இழைகள் முறுகி கெட்டியாக ஊர்ந்தியாக அவளைத் தேராய் இழுக்க... ''நான் கிளம்பறேன் மீனு... அம்மா சீக்கிரம் வந்துவிடுன்னு... அடுத்த வாரம் மறுபடியும் வரேன்!'' என்று விடைபெற்றாள்.

தொடர்ந்து ஒரு மாத லீவுக்கு விண்ணப்பித்த மீனு... வெளியே வரவே பிடிக்காமல் வீட்டோடு அடைந்தாள்.

சரியாக சாப்பிட்டு... நிம்மதியாகத் தூங்கி..! வாய்விட்டு சிரித்து...

ஓ! எத்தனை நாட்களாகிவிட்டன!

— 'பாவி! நீ யாருடா... உனக்கு நான் என்ன துரோகம் பண்ணினேன்... நீ நன்னாயிருப்பியா...?'

பொழுதன்னிக்கும் ஓயாமல் வயிற்றில் ஒரே இரைச்சலாகத்-திரும்பத் திரும்ப சாபமிட்டுக் கொண்டிருக்க...

8

பாலன்ஷீட் டாலியாகி விட்ட திருப்தியில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு இளைப்பாறினாள் நளினி.

திடீரென்று மீனுவின் லீவ் லெட்டரை கொடுக்கமறந்துவிட்டோமே...என்றநினைவு வர லீவ் லெட்டரை எடுத்துக் கொண்டு எஸ்டாப்ளிஷ்மெண்ட் செக்ஷனுக்கு கிளம்பினாள். சற்று உள்ளே தள்ளியிருந்த அந்தப் பிரிவின் பக்கம் வரும்போது... பின்படிகட்டு வழியாக பாஸ்கர் இறங்குவது தெரிந்தது. அவன் தன்னைப் பார்த்துவிடாமல் இருக்க அந்தப் பெரிய காட்ரெஜின் பக்கம் தன்னை மறைத்துக் கொண்டாள்.

இவன் எங்கே போகிறான்?

மெதுவாக. ஆனால் பரபரவென அவன் வேகம் காட்டியது சந்தேகத்தை எழுப்ப, அவன் பார்வையிலிருந்து மறைந்ததும் வராந்தாவின் ஜன்னல் வழியாகத் தன் பார்வையை வெளியே செலுத்தினாள்.

அங்கே...

புல்லட்டை வெளியே தள்ளிக் கொண்டு வந்து நிறுத்தி ஓங்கி உதைத்து அவசரமாக அதைக் கிளப்பிக் கொண்டு போனது மனத்தில் சந்தேகத்தைக் கிளப்ப அவனைப் பின் தொடர முடியவில்லையே என்ற சலிப்பில் அப்படியே நின்றுவிட்டாள். அவன் பேரில் விழுந்த சந்தேகம் அப்படியே அசையாமல் கல்லுளியாய் நின்றது. பார்ப்பதற்கென்னவோ அவன் கறுப்பாக... வழுக்கைத் தலையும் குறுப்பை தட்டிய கண்களுமாய் வில்லத்தனமாக இல்லைஎன்றாலும் அவன் கண்களின் குரூரத்தை அவளால் நன்றாக உணர்ந்து கொள்ள முடிந்தது.



## "எண்ணத்தில் இளமை துள்ளும்போது, தோற்றத்திலும் இளமை வேண்டுமன்றோ!"

### "நான் வழக்கமாக கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்"

—தனூஜா

பிரபல, திரைப்பட மற்றும் டி. வி. நட்சத்திரம் தனூஜா எப்போதும் தன் தோற்றத்தை கவர்ச்சிகரமாக வைத்திருக்கிறார். இவரின் குன்றாத இளமை, இவரை துடிப்புடனும், சுறுசுறுப்புடனும் தோன்றச் செய்கிறது.

"திருமணம் ஆகி இரண்டு பெண்களுக்கு தாயான பின்பும், நான் இளமையுடன் தோன்ற வேண்டும் என விரும்புகிறேன் ஆகையால், கேசத்திற்கு சாயம் பூசுவதை நகச்சாயம் தீட்டிக் கொள்வது போலவே முறை தவறாமல் செய்கிறேன்!"

"நான் கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்! இது பாதுகாப்பானது; தானே பரவுகிறது; உபயோகிக்க எளிது. கேசத்திற்கு இயற்கை வண்ணமூட்டுகிறது. ஆம் நிச்சயமாக, நான் இளமையுடன் தோன்ற விரும்புகிறேன்! எந்தப் பெண்மணிதான் விரும்ப மாட்டாள்!!"

இப்போது 25% அதிகம் புதிய பேக்கில்







உங்களால் ஊகிக்கவே முடியாது... அவர் சொல்லும் வரை... இவ்வளவு இயற்கையான தோற்றம்.

Mudra: B: GPH: 2705: TM

மாவடு, ஊறுகாய் தீர்ந்துவிட்டால் மாவடு ஊறிய தண்ணீரை வேஸ்ட் பண்ண வேண்டாம். அதில் சுண்டைக் காய், சுக்காங்காய் ஆகியவற்றைப் போட்டு வெயிலில் காய வைத்து வற்றல் செய்யலாம். இந்த வற்றல் மிகவும் சுவையாக இருக்கும்.

— விசாலாட்சி.

நிச்சயம் இவன் மீனு வீட்டின் பக்கம்தான் செல்கிறான்.

எழுதிய மொட்டைக் கடிதத்தின் பின் விளைவுகளை ஊர்ஜிதம் செய்து கொள்ளத்தான் இந்த அவசரம்.

அவனை நினைத்தபோதே புசுபுசுவென பொங்கிய மனது வாய் கொண்ட மட்டுப் சபித்து ஓய்ந்தது.

மின்னலாய் மனத்தில் அந்த எண்ணம் பளீரென வெட்டி மறைந்தது

சத்யாவைப் போய்ப் பார்த்தால் என்ன?

நிச்சயம் அவன் அவளுக்கு உதவுவான்...

''ஏம்மா, உனக்கு வேறே வேலை இல்லே..!'' என்று நிச்சயம் மறுக்க மாட்டான் என்ற நம்பிக்கை இருந்தது.

ஒருவேளை... இந்த முயற்சியால் நின்று போன அந்தக் கல்யாணம் நடக்கவும் சந்தர்ப்பம் இருக்கிறது.

உன்னதமான அந்தத் தகப்பனின் குணங்கள் நிச்சயம் இவனுக்கும் இருக்கும். எனக்கு இவன் உதவி செய்வான்.

மனத்தில் ஒரு பிடிப்பு எழ...

9

புகைப்படத்தில் பார்த்ததைவிட நேரில் இன்னும் பளீரென்றிருந்தான். அழுந்திய முகவாயின் இறுக்கத்தில்... தீவிரமான பார்வையில் சமீபத்தில் பட்ட மனத்தின் வலி லேசாகத் தெரிந்தது.

''ஐயாம் நளினா!' சுய அறிமுகம் சுலபமாயிருந்தது.

'எதற்காக இந்த அறிமுகம்? நீங்கள் பார்க்க வந்த நபர் நான்தானா?' மெல்லிய சந்தேகப் பார்வை புருவத்தின் நெறிப்பில் தெரிய...

''மிஸ்டர் சத்யகுமார், உங்களிடம் கொஞ்சம் பர்ஸனலாக பேசணும்... ப்ளீஸ்... மாட்டர் இஸ் அர்ஜன்ட்.''

''பர்ஸனல்?'' — 'இவளுக்கு என்னிடம் பர்சனலாகப் பேச என்ன இருக்கு? யார் இவள்? பார்த்தால் துணிச்சல்காரியாக இருக்கிறாளே!'

''ஓ.. கே..!'' எழுந்தான் சத்யா.

மெல்ல அவனைப் பின் தொடரலானாள் நளினா.

கும்பல் அதிகம் இல்லாத ஒதுக்குப்புறமாக இருந்த இரட்டை சீட்டில் உட்கார்ந்தவன் அவள் எதிரே அமர வேண்டும் என்பதைக் குறிப்பில் உணர்த்தினான்.

ஐஸ் வாட்டர் கொண்டு வந்து வைத்த பேரரிடம் சூடாக என்ன இருக்கிறது என்று விசாரித்து...

ஒரு செட் போண்டோவுக்கு ஆர்டர் செய்தான். கூடவே... தாமதித்து இரண்டு கப் காப்பி கொண்டுவரச் சொல்லிவிட்டான்.

குபீரென்று நேரடித் தாக்குதலில் இறங்கினாள் நளினா.

சுடச்சுட போண்டோவும் சட்னியும் வந்தது. பாஸ்கரன் மீனுவிடம் வாலாட்டியதையெல்லாம் மெல்லச் சாப்பிட்டுக் கொண்டே அவள் சொல்லி முடித்தாள்.

''உங்கள் தோழிக்கு சப்போர்ட் ஆக...!'' அவன் ஆரம்பித்தான்.

பட்டென்று குறுக்கே வந்தாள் அவள்.

''நோ... உண்மைக்கும் சத்தியத்துக்கும் சப்போர்ட் ஆக...!'' என்று பளிச்சென்று பேசிய அவள் பேச்சு அவனை நிமிர்ந்து உட்கார வைக்க... மெல்லச் சிரித்தான்.

''என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

அந்தப் பாவியைப் பின்தொடரணும். மீனு வீட்டின் தெருவில்தான் அவன் நடமாட்டம் இருக்கும். கல்யாணம் நின்னு போச்சா என்றறிய அவன் அங்கே விபரம் சேர்க்கப் போயிருப்பான். அவன்தான் குற்றவாளி என்ற ஊகம் சரியானது என்றால் அவன் அங்கேதான் போயிருப்பான். எனக்கு உங்களிடம் வந்து கேட்பது தவிர வேறு நியாயமான பாதுகாப்பான வழி தெரியவில்லை. சப்போஸ் எனக்கு ஒரு ப்ரதர் இருந்தால் அவனிடம் நான் உதவிக்கு ஓடியிருப்பேன். ஐயாம் நாட் தட் மச் பார்சுனேட்...!'' அவள் மெல்ல நிறுத்தினாள்.

அவளிடம் அவனுக்கு நெருக்கமான பாசப் பிணைப்பு ஏற்பட....

''தேங்க் யூ சிஸ்டர்!'' அவன் இதமாக பதில் சொல்லி... அவளின் முயற்சிக்குத் தான் துணையாக வருவதை உறுதி செய்ய...

''மிஸ்டர் சத்யா...!''

அவள் அவனை ஆழமாகப் பார்த்தாள். தன் சந்தோஷத்தை, தன் நன்றியைத் தெரிவிக்க முயன்று... அதில் தோற்றபோது மெல்லிய நீர் திரை கண்ணை மறைக்க...

''அவள்... உங்களை மறக்கவேயில்லே... இந்த ஒரு வார காலத்தில் அவள் எப்படி ஆகிவிட்டாள் தெரியுமா சத்யா... இளைத்துக் கறுத்து... கண்கள் எங்கோ பாதாளத்தில் புதைந்து... நிஜமாகவே... அவளைப் பார்த்தபோது நான் எப்படித் தவித்துவிட்டேன் தெரியுமா?''

அவள் அப்பா... எத்தனை நல்லவர்... எனக்குத் தெரிந்து ஒரு ஜீவராசிக்குக் கூட அவர்கள் தீங்கு பண்ணியதில்லே.

நடைபிணமாகிவிட்டார்... ஒன்றுமே இல்லாமல் போய்விட்டார். அந்தப் பெண் மீது அவர் உயிரையே வைச்சிருக்கார். இந்த கல்யாணம் நிச்சயமாகப் போகிறது என்று அவள் வந்து என்னிடம் சொன்ன அன்று... அவள் முகம் எப்படி பூத்து மின்னியது... அந்த மனத்தின் சந்தோஷங்கள் எப்படியெல்லாம் பூத்து வழிந்தது என்று எனக்குத்தான் தெரியும்.

அந்த சந்தோஷத்தையும் புரிந்து கொண்டவள் நான். இந்தக் கல்யாணம் மறுபடியும்

# அம்மாடியோ! அம்மாவோடு
# ஆசையுடன் விளையாட
# நேரமே போதாதே!

உங்கள் அருமைச் செல்வத்தின் எதிர்கால வாழ்வுக்கு
இன்றே போலியோ சொட்டு மருந்து அளித்திடுங்கள்

**உங்கள் குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து
அளித்து இளம்பிள்ளை வாத நோயிலிருந்து
பாதுகாப்பு அளித்திடுங்கள்**

வார நாட்களில்

மாலை : 3 முதல் 6 வரை ஞாயிறு : விடுமுறை

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ சொட்டு மருந்து டிரிபிளாண்டிஜென்
மற்றும் மீஸில்ஸ் வாக்ஸின்

அளிக்கப்படும் இடம் :

**தமிழ்நாடு தாதா பார்மஸுடிகல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர்,
(ஆயிரம் விளக்கு மசூதி அருகில்) சென்னை-600 086.
தொலைபேசி : 470656 479603



நிச்சயமாகணும். அதுதான் என் ஆசை சத்யா...! ப்ளீஸ்.. என் மீனுவை நீங்கள் புரிஞ்சுக்கணும்... அவள் எப்பேர்ப்பட்ட பெண்? அவளுக்கா இப்படி ஒரு கஷ்டம்? அவள் வயிற்றில் சதா எரிந்து கொண்டிருக்கும் அக்கினி அணைந்து குளிரணும் சத்யா...

மனம் நெகிழ்ந்த சத்யா அவளுடைய திட்டத்திற்கு இசைந்தான்.

## 10

அந்தச் சிவப்புக் கட்டிடம் தனித்து நின்று கொண்டிருந்தது. ஏதோ யோசித்தவளாய், சத்யா உள்ளே நுழையவும், மிடுக்குடன் ராகவன் வெளியே வரவும் சரியாக இருந்தது.

ஒரு நிமிடம் கால தாமதமாக வந்திருந்தால் கூட இவனைப் பார்த்திருக்க முடியாது.

"ஹலோ சத்யா!"

வேகமாக முன்வந்த ராகவன் அவனை அப்படியே இறுக்கி அணைக்க...

"அப்பா ராகவ்! இனிமேல் எலும்புகள் ஜாக்கிரதை என்ற அறிவிப்பை மாட்டிக் கொண்டுதான் வரவேண்டும் போலிருக்கிறது... கொஞ்சம் பார்த்துப்பா...!" சத்யா விளையாட்டாய்க் கூற...

"சத்யா.. உன்னை பார்த்து எத்தனை வருஷங்களாச்சு..."

"நோ... கரெக்ட் யுவர் செல்ஃப். போன வருடம்தானே உன் தங்கையின் திருமணத்தில் பார்த்தேன்... மறந்து போயிட்டயா?"

"சாரி ஒரு வருட இடைவெளி... பல வருடங்களாக நீண்டு தோன்றிவிட்டது!"

"வா... போய்க் கொண்டே பேசலாமே!"

எங்கு ஆரம்பிப்பது? எப்படித் தொடர்வது...? சிக்கலான நூல்கண்டின் நுனி கிடைக்க... ஒவ்வொன்றாகச் சொல்லி முடித்தான். வர்ணங்கள் மாறிக் கொண்டிருந்த ராகவனின் முகத்தில் சிந்தனை ஓடியது.

"சத்யா யூ ஆர் க்ரேட். பெயருக்கேற்ற உத்தமன் நீதான்டா... வரதட்சிணை கொடுமையும், ஸ்டவ் வெடித்து எரிந்து சாம்பலாகும் பெண்மை அவலமாக மலிந்து கிடக்கும் இந்த நாட்டில்.. உன் போல் உத்தமன்... என்னால் உன்னை வாழ்த்தாமல் இருக்க முடியவில்லை.

"உன் அன்புக்குரியவளின் பெயர் என்ன சொன்னே... ஹ...ங்... மீனு... அவள் ரொம்ப அதிர்ஷ்டசாலிப்பா. இப்படி ஒரு மனிதனை புருஷனாக அடையக் கொடுத்து வச்சிருக்கணும். நிச்சயம் இந்த துர் நிலைமைக்குக் காரணமானவனைக் கண்டுபிடித்து விடலாம். இது ஒன்றும் பெரிய சமாசாரம் இல்லை. இட் இஸ் நாட் எ பிக் திங்!"

"ராகவ்... எந்த ஒரு தவறும் செய்யாத இந்த இளம் பெண்ணின் வாழ்க்கை குருத்து கருகி போயிடக் கூடாது. அவளை இப்படியே இதேநேரத்தில் திருமணம் பண்ணிக்க நான் தயார்... ஆனால்... அவள் மனத்தில் என் நினைவுகளைப் பற்றிய உறுத்தல் சதா இருந்து கொண்டேயிருக்கும். இந்த உறுத்தலோடு நான் அவளைத் தொட்டால் அவள் கருங்கிப் போவாள். அவளைப் பற்றிய அபவாதத்தைத் துடைத்து வழித்து எறிந்துவிட்டுத் திருமணம் நடந்தால்தான் அவளுக்கு நிம்மதி இருக்கும். இந்த நம் முயற்சிகள் வெளியில் தெரிய வேண்டாம். போலீஸ் ஸ்டேஷன், கம்ப்ளெயின்ட்... தண்டனை... பரபரப்பானஇவை பத்திரிகை வியாபாரத்துக்குத்தானே தவிர..., ஒரு பெண்ணின் அமைதியான வாழ்க்கைக்கல்ல... அத்தனை முயற்சிகளும் அன்அபிஷியலாக நடக்கணும். மிரண்ட அந்த ஆள் இந்த பக்கம் தலைவைக்காமல் ஓடணும். கண்டு பிடித்து உள்ள தள்ளப் போறதுனால பிரச்னை சால்வ் ஆகப் போறதில்லை. பழி வாங்கற மனப்பான்மை இன்னும் இறுகி இருக்கிற நிம்மதியையும் கெடுத்துடும்.

"இப்ப தேவை... நிம்மதி... அமைதியான வாழ்க்கை... ஒரு பெரிய பிரச்னையில் அழுந்தியிருக்கும் அவளுக்கு முதலில் தேவைப்படுவது மனவிடுதலை."

"இந்த முயற்சிகளுக்கெல்லாம் காரணம் யார் தெரியுமா? அந்தப் பெண் தனிளு...



அ...ப்...பா... ஜான்ஸி இ ராணி... ராகவ்... என்ன தைரியம்... என்ன வேகம்... எத்தனை விவேகம்!''

''நிமிர்ந்தநடையும்நேர்கொண்டபார்வையும் என்று பாடினனே பாரதி... அவன் கண்ட புதுமைப்பெண் அவள்தாண்டா! எவன் கொடுத்து வைத்திருக்...!''

சட்டென்று இந்த ராகவனே ஏன்... ஓடியதை வழிமறித்துத் தன்னுள் நிறுத்திக் கொண்டான்.

கல்யாணம் நின்றுபோவதற்குக் காரணமான மொட்டை கடிதம்... நளினி மீனவிடமிருந்து கைப்பற்றிய கடிதம் இரண்டையும் அவனிடம் சேர்த்தான் சத்யா.

''ராகவ்! பொறுப்பை உன்னிடம் ஒப்படைச்சிருக்கேன். பி. கேர்ஃபுல். அவனுக்கு நாம் வலை விரித்திருக்கும் தடயம் எதுவும் தெரியக்கூடாது.

நண்பனின் ஜாக்கிரதை உணர்வு அவனுக்குச் சிரிப்பை வரவழைத்தது.

''ரிலாக்ஸ் சத்யா... ப்ளீஸ்! அடுத்த வாரம் இந்நேரம் என்ன நடக்கிறது பார்...!''

''நான் கிளம்பட்டுமா?''

''ஓ. கே.. சீ யூ!''

## 11

ஒரு பகையாளியை அடிச்சுப் போட்டு வீழ்த்த ஒண்ணுமே பண்ண முடியாமல் செயலற்றுப் போக வைத்து ஜெயிக்கணும்னு எதிர்தரப்பிலிருந்துமுட்டிமோதிகாயப்பட்டு இரத்தம் கொட்டி இரைத்து இளைக்க வேண்டாம்.

அந்த எதிரியின் பக்கமே சேர்ந்து விடணும். அவனோடு இழைந்து குழைந்து போய்... இவனைப் போல் ஒரு நண்பன் கிடைப்பானு என்று அவனை ஏங்க வைத்து... சந்தர்ப்பம் பார்த்திருந்து—'லபக்' என்று ஒரு பாய்ச்சல்!

ஒரேஒருசின்னஇடறல்தான். தலைகுப்புறக் கவிழ்ந்துவிடுவான்.

நேர்மையும், சிறந்த அறிவும், வீரமும்... திட்டமிட்டுச் செயல்படும் திறமையும், நிறைந்த ராகவனுக்கு பாஸ்கருடன் நட்பு பூண்டு, அவனோடு சேர்ந்து பழகி குறுகிய



காலத்தில் வீழ்த்துவது கடினமாகவேயில்லை.

வேண்டுமென்றே அவன் வண்டியில் மோதி...

"வெரி சாரி மை டியர் ப்ரண்ட்!" என்று கைகுலுக்கி, அதே வண்டியின் ரிப்பேர் செலவை ஏற்று அப்படியே மாற்றி புதுவண்டியாகப் புதுப்பித்து நட்பை விரிவாக்கினான்.

அவனை நன்றாக எடைபோட்டு, அவனது பலவீனஸ்தானங்களை புள்ளிகுத்தித்தெரிந்து வைத்து, பணத்தை வாரி வலையாக விரித்து வீசி, அவனைப் பிடித்தான்.

வாட் 69 ல் அவனை முக்கி, அவனை ஸ்லோ மோஷனில் சொர்க்கத்துக்கு அழைத்துப் போய்... நின்று கொண்டிருப்பவனை சறுக்கி விழ வைத்தான்.

போதையில் மிதந்தவனை நிறுத்தி... தானும் அதோடு நீச்சலடிப்பதாய் பாவனை செய்து, "மச்சி! உன் அடவியிலே ஒரு பச்சைக் கிளி காண்பிச்சயே அது வேணும்மா!" என மெல்ல ஆரம்பித்தான்.

"யாருப்பா... அந்த மீனாப் பொண்ணு!"

"அதான் மச்சி... போன வாரம் பார்த்தமே... சிவப்பா... ஒடிசலா!"

"அதுவா... நான் என்ன பெரிய வேலை செய்துக்கறேன் தெரியுமா... நான் 'ட்ரை' பண்ணேன். ஒத்துக்க மாட்டேன்னு. உனக்குப் புடிச்சிக் கொண்டாறேன்..."

"உன்னால முடியாதுன்னு வுடு ராசா!"

"ப்பூ... உனக்கு தெரியாது. நான் முன்னாலயே அந்தக் கிளியின் இறக்கையை பிச்சு போட்டவன். அந்த ஐயரு மவளுக்கு கல்யாணம் பேசி முடிச்சாரு. நான் என்ன செய்தேன் தெரியுமா... மாப்பிள்ளையோட அப்பனுக்கு எழுதிப்புட்டேன்... நல்லா வச்சேன் வத்தி — நின்னு போச்சுப்பா கண்ணாலம்!"

"ஹாங்... வாத்யாரு... நீ படாகில்லாடி தான்... ஒரு தம் எடு ராசா! எனக்கென்னுங் காட்டி அந்த குட்டி மேலே ஒரு கண்...!"

"நல்லா கிக் ஏறுதுப்பா... சும்மா சொல்லிட்டா சரியா.... சரக்கு ஏ ஒன் சாமி!" பேசிக்கொண்டே வந்தவன் பாலன்ஸ் போய் கைகால் விறுக்கென்று வெட்டிப்பிரியகுப்புற கவிழ்ந்தான்.

அதற்குமேல் வேலை செய்வது ராகவனுக்குக் கடினமாக இல்லை.

வேஷத்தைக் கலைத்தவனாய் வெளிச்சத்துக்கு வந்தான்.

வெளியே வந்தவன் உடனடியாக ரூமை வெளிப்புறமாக லாக் பண்ணினான். ரிஸப்ஷனில் போய் தன்னுடைய ஐடென்டிடியை காண்பித்துச் செயல்பட ஆரம்பித்தான்.

அடுத்த சில மணிகளின் முடிவில் அந்த ஹோட்டலின் அறையில் சத்யா, மஹாலிங்கம், நளினா, வங்கியின் ஜி. எம். குழுமினர்.

திரை மறைவில் மீனா, அவள் தகப்பனார், பாஸ்கரின் மனைவி திக்பிரமை பிடித்து உட்கார...

ராகவன் இதுநேரம் பத்திரமாக டேப் செய்து காப்பாற்றிய கருவை ஓடவிட ஏற்பாடு செய்தான்.

சொர்க்கத்தின் கதவுகள் மூடிக் கொள்ள போதை தெளிந்து... கண்விழித்தான் பாஸ்கர். கொஞ்ச நேரமாயிற்று கண்ணைத் திறந்து பார்த்து இருக்கும் இடத்தை ஊர்ஜிதம் செய்து கொள்ள... மெல்லக் கண்களைச் சுற்றிலும் ஓடவிட்டான்.

கையில் விலங்கை ரெடியாக வைத்துக் கொண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்... யாரது? பார்த்த முகமாக இருக்குது...?

'ராகவன்...!'

'சொரேர்' என்றது வயிற்றில்.

முகம் தெரியாத மற்ற இந்த மனிதர்கள் யார்...?

ராகவன் மெல்ல அவன் குற்றச்சாட்டுகளை விவரிக்க... மறுக்க முயன்று நெளிந்த அவன் முன்... அந்தப் பதிவுநாடா ஓடவிடப்பட...

நுணலும் தன் வாயால் கெட்ட கதை புரிந்தபோது... இனிமேல் தப்ப வழியில்லை என்றவனாய் நீள நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான்.

"என்னை மன்னிச்சிடுங்க... இவ்வளவு பெரிசா இது ஆகும்னுட்டு தெரியாது. அந்தப் பொண்ணு எனக்கு இணங்கும்னுட்டு நினைச்சேன். பாவி, அது இம்மாந்தொலைவுக்கு செய்திடுச்சு!"

சட்டென்று சத்யா இடைமறித்தான். "சீ... வாயை மூடு... ராஸ்கல்... அந்தப் பொண்ணுக்கு எதுவுமே தெரியாது. நான் அவளைக் கட்டிக்கப் போறவன். என் தகப்பனுக்கு நீ எழுதிய கடுதாசி வச்சு நான் உன்னை இறுக்கி வளைச்சேன்... பொறியில் மாட்டிய எலியாய் தவிக்கிறியே... டேய்... ஒரு பொண்ணோட வாழ்வை குட்டிச்சுவராக்க பார்த்தியே... அதுக்கு உனக்கு என்ன தண்டனை

---

மோர் மிளகாய் போடும்போது, இரண்டு மூன்று நாட்கள் நன்றாக மிளகாய் மோரில் ஊறியதும் அதில் ஒரு பிடி ஊற வைத்த உளுத்தம் பருப்பு 2 டீஸ்பூன் வெந்தயம் இவற்றை 'கொட கொட' என்று கல்லுரலில் ஆட்டி அந்த விழுதையும் சேர்த்து சிறிது புளித்தண்ணீருடன் பிசிறி ஊறவைத்து காயவைத்தால் ஊறுகாய் மிளகாய் காய்ந்து வறுக்கும் போது நல்ல மணமாக இருக்கும். இந்த முறையில் மிளகாய் விதைகள் உதிர்வதில்லை.

— டி. விஜயலட்சுமி.

காலத்தில் வீழ்த்துவது கடினமாகவேயில்லை.

வேண்டுமென்றே அவன் வண்டியில் மோதி...

''வெரி சாரி மை டியர் ப்ரண்ட்!'' என்று கைகுலுக்கி, அதே வண்டியின் ரிப்பேர் செலவை ஏற்று அப்படியே மாற்றி புதுவண்டியாகப் புதுப்பித்து நட்பை விரிவாக்கினுன்.

அவனை நன்ருக எடைபோட்டு, அவனது பலவீனஸ்தானங்களை புள்ளிகுத்தித்தெரிந்து வைத்து, பணத்தை வாரி வலையாக விரித்து வீசி, அவனைப் பிடித்தான்.

வாட் 69 ல் அவனை முக்கி, அவனை ஸ்லோ மோஷனில் சொர்க்கத்துக்கு அழைத்துப் போய்... நின்று கொண்டிருப்பவனை சறுக்கி விழ வைத்தான்.

போதையில்மிதந்தவனை நிறுத்தி... தானும் அதோடு நீச்சலடிப்பதாய் பாவனை செய்து, ''மச்சி! உன் ஆபீஸிலே ஒரு பச்சைக் கிளி காண்பிச்சயே அது வேணும்மா!'' என மெல்ல ஆரம்பித்தான்.

''யாருப்பா... அந்த மீனுப் பொண்ணு!''

''அதான் மச்சி... போன வாரம் பார்த்தமே... சிவப்பா... ஒடிசலா!''

''அதுவா... நான் என்னு பெரிய வேலை செய்துக்கறேன் தெரியுமா... நான் 'ட்ரை' பண்ணேன். ஒத்துக்க மாட்டேன்னு. உனக்குப் புடிச்சிக் கொண்டாறேன்...''

''உன்னுல முடியாதுன்னு வுடு ராசா!''

''ப்பூ... உனக்கு தெரியாது. நான் முன்னுலயே அந்தக் கிளியின் இறக்கையை பிச்சு போட்டவன். அந்த ஐயரு மவளுக்கு கல்யாணம் பேசி முடிச்சாரு. நான் என்னு செய்தேன் தெரியுமா... மாப்பிள்ளேயோட அப்பனுக்கு எழுதிப்புட்டேன்... நல்லா வச்சேன் வத்தி — நின்னு போச்சுப்பா கண்ணுலம்!''

''ஹாங்... வாத்யாரு... நீ படாகில்லாடி தான்... ஒரு தம் எடு ராசா! எனக்கென்னுங் காட்டி அந்த குட்டி மேலே ஒரு கண்...!''

''நல்லா கிக் ஏறுதுப்பா... சும்மா சொல் விட்டா சரியா.,.. சரக்கு ஏ ஒன் சாமி!'' பேசிக்கொண்டே வந்தவன் பாலன்ஸ் போய் கைகால்விறுக்கென்று வெட்டிப்பிரியகுப்புற கவிழ்ந்தான்.

அதற்குமேல் வேலை செய்வது ராகவனுக்குக் கடினமாக இல்லை.

வேஷத்தைக் கலைத்தவனும் வெளிச்சத்துக்கு வந்தான்.

வெளியே வந்தவன் உடனடியாக ரூமை வெளிப்புறமாக லாக் பண்ணினுன். ரிஸப்ஷனில் போய் தன்னுடைய ஐடென்டிடியை காண்பித்துச் செயல்பட ஆரம்பித்தான்.

அடுத்த சில மணிகளின் முடிவில் அந்த ஹோட்டலின் அறையில் சத்யா, மஹாலிங்கம், நளினு, வங்கியின் ஜி. எம். குழுமினர்.

திரை மறைவில் மீனு, அவள் தகப்பனுர், பாஸ்கரின் மனைவி திக்பிரமை பிடித்து உட்கார...

ராகவன் இதுநேரம் பத்திரமாக டேப் செய்து காப்பாற்றிய கருளை ஓடவிட ஏற்பாடு செய்தான்.

சொர்க்கத்தின் கதவுகள் மூடிக் கொள்ள போதை தெளிந்து... கண்விழித்தான் பாஸ்கர். கொஞ்ச நேரமாயிற்று கண்ணைத் திறந்து பார்த்து இருக்கும் இடத்தை ஊர்ஜிதம் செய்து கொள்ள... மெல்லக் கண்களைச் சுற்றிலும் ஓடவிட்டான்.

கையில் விலங்கை ரெடியாக வைத்துக் கொண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்... யாரது? பார்த்த முகமாக இருக்குது...?

'ராகவன்...!'

'சொரேர்' என்றது வயிற்றில்.

முகம் தெரியாத மற்ற இந்த மனிதர்கள் யார்...?

ராகவன் மெல்ல அவன் குற்றச்சாட்டுகளை விவரிக்க... மறுக்க முயன்று நெளிந்த அவன் முன்... அந்தப் பதிவுநாடா ஓடவிடப்பட...

நுணலும் தன் வாயால் கெட்ட கதை புரிந்தபோது... இனிமேல் தப்ப வழியில்லை என்றவனுய் நீள நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான்.

''என்னை மன்னிச்சிடுங்க... இவ்வளவு பெரிசா இது ஆகும்னுட்டு தெரியாது. அந்தப் பொண்ணு எனக்கு இணங்கும்னுட்டு நினைச்சேன். பாவி, அது இம்மாந்தொலைவுக்கு செய்திடுச்சு!''

சட்டென்று சத்யா இடைமறித்தான். ''சீ... வாயை மூடு... ராஸ்கல்... அந்தப் பொண்ணுக்கு எதுவுமே தெரியாது. நான் அவளைக் கட்டிக்கப் போறவன். என் தகப்பனுக்கு நீ எழுதிய கடுதாசி வச்சு நான் உன்னை இறுக்கி வளைச்சேன்... பொறியில் மாட்டிய எலியாய் தவிக்கிறியே... டேய்... ஒரு பொண்ணேட வாழ்வை குட்டிச்சுவராக்க பார்த்தியே... அதுக்கு உனக்கு என்ன தண்டனை

மோர் மிளகாய் போடும்போது, இரண்டு மூன்று நாட்கள் நன்ருக மிளகாய் மோரில் ஊறியதும் அதில் ஒரு பிடி ஊற வைத்த உளுத்தம் பருப்பு 2 டீஸ்பூன் வெந்தயம் இவற்றை 'கொட கொட' என்று கல்லுரலில் ஆட்டி அந்த விழுதையும்சேர்த்துசிறிதுபுளித்தண்ணிருடன்பிசிறிஊறவைத்துகாயவைத்தால் ஊறுகாய் மிளகாய் காய்ந்து வறுக்கும் போது நல்ல மணமாக இருக்கும். இந்த முறையில் மிளகாய் விதைகள் உதிர்வதில்லை.

— டி. விஜயலட்சுமி.

இன்றும் சிலர் வீட்டிலேயே உளுந்து அப்பளம் தயாரிக்கின்றனர். அவர்கள் பிரண்டை அரைக்கும்போது, செம்பருத்தி இலைகளையும் கொஞ்சம் வைத்து அரைத்து, அந்த நீரைக் காய்ச்சி அப்பள மாவுடன் பிசைந்து இட்டால், அப்பளம் வெள்ளை வெளேரென்றும் இருக்கும். குமிழ் குமிழாய்ப் பொரியும்.

— ஜி. இந்திரா.

கிடைக்கும் தெரியுமா... ராகவ் இந்த ஸ்கௌண்ட்ரலை அரெஸ்ட் பண்ணுங்கள்! இதைப் பார்... நீ எழுதிய கடிதங்கள்!''

அவன் முகத்துக்கெதிரே அவன் விரித்துக் காண்பிக்க... இத்தனையும்... எப்படி இவர்கள் கையில்...?

''நான் எழுதலைங்க!''

''வாயைமூடுபடவா பயலே... நீஎழுதலே... ஆனால் எழுத வச்ச... எழுதினவனே ஒப்புக் கொண்டுவிட்டான் வாத்யாரே!''

''அடப்பாவி சோமு! நூறுரூபாய் களையா அழுதேனே!''

அவன் வாயிலிருந்து வார்த்தைகளை வர வழைத்த ராகவ்... ''சார்... நீங்க இனிமேல் அபிஷியலா செய்வதைச் செய்யலாம்!''

வங்கியின் அதிகாரி... இத்தனைச் செயல்களுக்கும் அத்தாட்சியாக... இருந்த பதிவு நாடா... கடிதங்கள்... அவன்கையெழுத்திட்ட ஸ்டேட்மென்ட், அனைத்தையும் சேகரித்துக் கொண்டு...

''ஐயாம் கோயிங் டு டிஸ்மிஸ் திஸ் ப்ளாகார்ட்!'' என்று சொல்ல... சட்டென்று ஓடிவந்தனர் மீனுவும் பாஸ்கரின் மனைவியும்... ''சார்... ப்ளீஸ் அவனை விட்டுடுங்க. தெரியாமல்செய்துட்டான்பாவம்.....அவனை வேலையை விட்டு நீக்கி ஜெயிலுக்கு அனுப்பினால் அவன் குடும்பம் கஷ்டப்படும் சார். அவன் குழந்தைகள் நடு ரோடில் நிற்கும்... பூரணமா மன்னிக்கறது ஒண்டிதான் சார்... அவனுக்கு நாம கொடுக்கற தண்டனை!'' என்று விசும்பினாள் மீனு.

மஹாலிங்கமும் சத்யாவும் வந்து அவள் தகப்பனையும் அவளையும் அழைத்துக் கொண்டு வர வந்தபோது கூட உண்மையைச் சொல்லவில்லை.

'மாமிக்கு உடம்பு சரியில்லை. உன்னைப் பார்க்கபிரியப்படறா!' என்றுதான் அழைத்து வந்தனர்.

சிவராமனுக்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை.

இது என்ன கதை மாதிரி...!

அக்கினி சாட்சியாய் தாலிகட்டி நீ என் பெண்டாட்டி என்று உரிமைஎடுத்துண்டவன் மனைவியை போகப் பொருளாகப் பார்த்து இன்னொருத்திக்கு அலையறான். அவனுடைய மனசை பார்க்கல... குணத்தைப் பார்க்கல.

இந்த உத்தமன்...

''பாகி! நீ தெய்வமா இருந்து நல்லபடியா முடிச்சுட்டேடி!'' விழிகுளத்தில் சந்தோஷ மீன்கள் துள்ளின.

''சாமி! என்வூட்டுக்காரர விட்டுடு சாமி... தெரியாம செய்துப்புட்டாரு... என் தாலியின் மானத்தைக் காப்பாத்துங்க... இந்த ஒரு வாட்டி மன்னிச்சிடுங்க...!''

''பாவி இப்படி செய்துட்டியேடா...!'' என்று வயிறு எரிந்தாலும், நெஞ்சு துடித்தாலும்... இவன் என் புருஷன், இவனுக்கு பக்கபலமாய் நான் நிற்கணும் என்ற பதிபக்தி முந்த... கதறினாள்.

வங்கியின் அதிகாரி...

''அம்மா மீனு... நீ என்ன சொல்றே!'' என்று கேட்க...

''சகோதரி... என்னை மன்னிச்சிடு...'' என்று பாஸ்கர் மீனுவின் கால்களில் விழ முயற்சிக்க... மீனு பயத்தில் நகர்ந்து கொள்ள முன்வந்த சத்யா மெல்ல அவளை அணைத்துக் கொண்டான்.

''நளினி... நீ மட்டும் இல்லேன்னா...'' மீனு விக்கி விக்கி அழ...

''டேக் இட் ஈஸி மீனு!'' நளினி அவளை சமாதானப்படுத்த...

ஜான்ஸி கி ராணியென்று சத்யா வர்ணித்த அந்தப் பெண்ணை அவன் பார்க்க... இருவர் கண்களும் பிணைந்து பிரிய முடியாமல் போராட....

மீனு தகப்பனிடம் புறாக் குஞ்சாய் ஒடுங்கிக் கொள்கிறாள்.

''அம்மா... உன் வயிற்றில் எரியும் நெருப்பு அணைந்ததாம்மா!''

இரவு பகலாகச் சுழல வைத்த நெருப்பு அணைந்து குளிர... அவள் விம்மி விம்மி... அந்த விம்மல் பெரிதாக வெடித்து அவளையும் மீறிக் குரல் வெளியே எக்கித் தெரிய... அழ...

இப்படி ஒரு பெண்ணை நோகடித்த பாவம்... என்னை விட்டுப் போகுமா... என்று பயந்து பாஸ்கர் தலை குனிய...

'அம்மாடி, என் குடும்பத்தைச் சீரழியாமல் காப்பாத்தின நீ நல்லாயிருக்கணும்னு அவன் மனைவி... பார்க்க...

''மீனும்மா! அழாதே... வா... வீட்டுக்குப் போகலாம்!'' என சத்யாவின் தாய் அவளை அணைத்துக் கொள்ள...

அங்கு ஒரு அக்கினி குளிர்ந்து அணைந்தது.

# அமைச்சர் வீடுகளில் கரப்பான் பூச்சிகள்



டில்லியில் குளிர்காலம் முடிவடைந்து கடும் வெயில் ஆரம்பித்துவிட்டது. இதில் எண்பது சதவிகிதம் இன்னல்கள் பெண் மணிகளுக்கே. ஒரு சிறிய குடும்பப் பெண் மணி ஃப்ரிட்ஜ் இல்லாது வெயில் காலத்தைக் கழிக்க முடியாது. காலையில் செய்த சாம் பார் ரசம், மதியம் ஒரிரு மணிக்குள் ''சிகைக்காய் பொடி'' வாசனை. தவிர சூடாக எதையுமே சாப்பிட முடியாது; போதுமடா என்று கூட எண்ணுமளவிற்கு சூடு. அனல் பறக்கும் வீக்கம்.

சமையலறையில் விநோதமான குட்டி குட்டி கரப்பான் பூச்சிகள், ஈக்கள். கேட்கவே வேண்டாம். பல்லிகளைக் கண்டு அலறும் ''ஸ்ரீமதி வி. ஐ. பி.க்கள்.'' ஐம்பது அறுபது வருடங்களுக்கு முன்பாக கட்டிய சில மந்திரி களது பங்களாக்களில் மேற்கூறியவைகள் அதிகம்.

இதை எப்படிச் சமாளிக்கிறார்களோ தெரியவில்லை. பி. வி. நரசிம்மராவ் மத்திய அமைச்சரின் புது மாட்டுப் பெண் ஐந்து ஆறு நாட்கள் தலைநகரில் தங்க வந்தாள். அலறிப் புடைத்தாள். எதைக் கண்டு தெரியுமோ? குட்டி காக்ரோச்தான். நெட் ரிசல்ட்... ஐந்து நட்சத்திர ஓட்டலுக்கே செல்வோம் என்று கூறிப் புறப்பட்டனர் புது மணத் தம்பதிகள்.

மத்திய அமைச்சரவையிலிருக்கும் பாதி மாண்புகளின் மனைவிகள் நடுத்தர வயதுடையவர்கள்தானே. இவர்கள் இந்தக் குட்டிப் பூச்சிகளை காட்டு விலங்குகளைப் போன்று நினைத்துப் பயப்பட மாட்டார்கள்.

ஸ்ரீமதி கனிதா கேட்டில். மத்திய செய்தி ஒலிபரப்பு மந்திரியின் துணைவியார். சமூக சேவகி. அரசு காரை பயன்படுத்தமாட்டார். எங்கே சென்றாலும் டாக்ஸி அல்லது தனது சொந்த கார். மற்ற மனைவிமார்களுக்கு முன் உதாரணம் என்றே கூறலாம். அடிக்கடி பிரதமர் ராஜீவ் காந்தியைக் காண பெண்களது தூதுக்குழுவுடன் போவார். இவர் இந்த வருடம் ஒரு வகுப்பு நடத்தியிருக்கிறார். யாருக்குத் தெரியுமா? சற்று வசதி படைத்தவர்களுக்கு அல்ல. நடுத்தர வர்க்கத்தினரின் வாழ்க்கைத் துணைவியர்களுக்கு. நிலக்கடலை கேக், தேன் பாகில் செய்வது எப்படி. வெல்லத்தில் செய்வதுதான் வழக்கம். ஆனால் அந்தப் பழக்கத்தில் சற்று மாறுதல் செய்து சொல்லித் தருகிறார். அதோடு சமையல் அறையில் பூச்சிகளைத் தடுக்க யோசனைகளையும் தருகிறார்.

வேறு ஒரு ''வி.ஐ.பி.'' யின் துணைவியாரை கேட்க வேண்டாம். அரிப் முகமது கான் முஸ்லிம் இனத்திலே புரட்சி செய்து வருபவர். இவரது மனைவி ரேஷ்மா அரிப் கான் சட்ட நிபுணர். சுப்ரீம் கோர்ட்டிற்கு பிரதி தினம் காலை 9 மணிக்குப் புறப்படுபவர். குள்ளம்; சற்று உடல் பருமன். வயதோ 32. இந்த வயதில் உடல் உப்புசம். இதைக் குறைக்கப் பாடுபடுகிறார்.

கணவரோ மந்திரிசபையிலிருந்து ராஜினாமா செய்தார். முஸ்லிம் பற்றிய மசோதா மீது. அச்சமயத்தில் ''முன்னாள் மந்திரிக்கு''

# அமைச்சர் வீடுகளில் கரப்பான் பூச்சிகள்



டில்லியில் குளிர்காலம் முடிவடைந்து கடும் வெயில் ஆரம்பித்துவிட்டது. இதில் எண்பது சதவிகிதம் இன்னல்கள் பெண் மணிகளுக்கே. ஒரு சிறிய குடும்பப் பெண் மணி ஃப்ரிட்ஜ் இல்லாது வெயில் காலத்தைக் கழிக்க முடியாது. காலையில் செய்த சாம் பார் ரசம், மதியம் ஒரிரு மணிக்குள் "சிகைக்காய் பொடி" வாசனை. தவிர கூடாக எதையுமே சாப்பிட முடியாது; போதுமடா என்று கூட எண்ணுமளவிற்கு சூடு, அனல், பறக்கும் வெக்கம்.

சமையலறையில் விநோதமான குட்டி குட்டி கரப்பான் பூச்சிகள், சக்கள். கேட்கவே வேண்டாம். பல்லிகளைக் கண்டு அலறும் "ஸ்ரீமதி வி. ஐ. பி.க்கள்." ஐம்பது அறுபது வருடங்களுக்கு முன்பாக கட்டிய சில மந்திரி களது பங்களாக்களில் மேற்கூறியவைகள் அதிகம்.

இதை எப்படிச் சமாளிக்கிறார்களோ தெரியவில்லை. பி. வி. நரசிம்மராவ் மத்திய அமைச்சரின் புது மாட்டுப் பெண் ஐந்து ஆறு நாட்கள் தலைநகரில் தங்க வந்தாள். அலறிப் புடைத்தாள். எதைக் கண்டு தெரியுமா? குட்டி காக்ரோச்தான். நெட-ரிசல்ட்.. ஐந்து நட்சத்திர ஓட்டலுக்கே செல்வோம் என்று கூறிப் புறப்பட்டனர் புது மணத் தம்பதிகள்.

மத்திய அமைச்சரவையிலிருக்கும் பாதி மாண்புகளின் மனைவிகள் நடுத்தர வயதுடையவர்கள்தானே. இவர்கள் இந்தக் குட்டிப் பூச்சிகளை 'காட்டு விலங்குகளைப் போன்று நினைத்துப் பயப்பட மாட்டார்கள்.

ஸ்ரீமதி கனிதா கேட்கில். மத்திய செய்தி ஒலிபரப்பு மந்திரியின் துணைவியார். சமூக சேவகி. அரசு காரை பயன்படுத்தமாட்டார். எங்கே சென்றாலும் டாக்ஸி அல்லது தனது சொந்த கார். மற்ற மனைவிமார்களுக்கு முன் உதாரணம் என்றே கூறலாம். அடிக்கடி பிரதமர் ராஜீவ் காந்தியைக் காண பெண்களது தூதுக்குழுவுடன் போவார். இவர் இந்த வருடம் ஒரு வகுப்பு நடத்தியிருக்கிறார். யாருக்குத் தெரியுமா? சற்று வசதி படைத்தவர்களுக்கு அல்ல. நடுத்தர வர்க்கத்தினரின் வாழ்க்கைத் துணைவியர்களுக்கு. நிலக்கடலை கேக், தேன் பாகில் செய்வது எப்படி. வெல்லத்தில் செய்வதுதான் வழக்கம். ஆனால் அந்தப் பழக்கத்தில் சற்று மாறுதல் செய்து சொல்லித் தருகிறார். அதோடு சமையல் அறையில் பூச்சிகளைத் தடுக்க யோசனைகளையும் தருகிறார்.

வேறு ஒரு "வி.ஐ.பி." யின் துணைவியாரை கேட்க வேண்டாம். அரிப் முகமது கான் முஸ்லிம் இனத்திலே புரட்சி செய்து வருபவர். இவரது மனைவி ரேஷ்மா அரிப் கான் சட்ட நிபுணர். சுப்ரீம் கோர்ட்டிற்கு பிரதி தினம் காலை 9 மணிக்குப் புறப்படுபவர். குள்ளம்; சற்று உடல் பருமன். வயதோ 32. இந்த வயதில் உடல் உப்புசம். இதைக் குறைக்கப் பாடுபடுகிறார்.

கணவரோ மந்திரிசபையிலிருந்து ராஜினாமா செய்தார். முஸ்லிம் பற்றிய மசோதா ரீது. அச்சமயத்தில் "முன்னாள் மந்திரிக்கு"



1



2



3



4



5

# சொல்லுங்கள்

1 இந்தக் கட்டிடம் எங்கு இருக்கிறது?

2 கேரம்விளையாடும்இந்தப்பையனையாரென்று தெரிகிறதா?

3 கண்ணாடி போட்டுக்கொண்டிருக்கும்இவரை யாரென்று தெரிகிறதா? உன்னிப்பாக கவனியுங்கள் தெரியும்.

4 இந்த டெலிபோனின் விசேஷம் என்னவென்று சொல்ல முடியுமா?

5 பேனர்களை கையில் தூக்கி இவர்கள் ஏன் ஊர்வலம் போகிறார்கள்?

6 இவரைப் பற்றி இப்போது பரபரப்பாக பேசப்படுகின்றது?

7 இவர்கள் எல்லாம் யார்?

8 இவர் இன்னொரு நாட்டில் தஞ்சம் புகுந்து இருக்கிறார். யார் இவர்?

9 இவர் தைரியசாலியான பெண்மணி. இவரை யாரென்று கண்டுபிடிக்க முடிகிறதா?







# பார்க்கலாம்



1 அண்டார்டிகாவில், நமது இந்தியக் குழு அண்டார்டிகாவில் ஒரு ரேடியோ சேந்திரத்தை உருவாக்கி இருக்கிறது. அதுதான் இது. இன்சாட் 1 B யின் மூலம் தகவல் பெற இந்த நிலையம் உதவும்.

2 மேனகா காந்தியின் மகன் வருண் காந்தி.

3 நமது பிரதமர் ராஜீவ் காந்திதான். நாகரிகக் கண்ணாடி அணிந்து இருக்கிறார்.

4 நாம் பேசிய பேச்சுக்களை மறுமுறையில் கேட்பதற்கு யாரும் இல்லை என்றால் இது தானாகவே பேச்சுக்களை ஒலிப்பதிவு செய்து கொள்ளும்.

5 கர்நாடகமாநிலத்தில்கும்பமேளா ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுகிறது. இந்த மேளாவில் பெண்கள் நிர்வாணமாகச் சென்று இறைவனுக்கு வேண்டுதல் செய்கின்றனர். இதை இந்த ஆண்டு பல சமூக ஸ்தாபனங்களும் எதிர்த்து மக்களின் அறியாமைக்கு பாடம் புகட்டவே இப்படி பேனர்களைத் தாங்கி ஊர்வலம் போகின்றனர் —

6 டெல்லி திஹார் சிறைச்சாலையிலிருந்து தப்பி ஓடி இப்போது பிடிபட்டிருக்கும் சோப ராஜ்தான் இவர்.

7 சேலஞ்சர் விண்வெளி விமானம் நடுவானில் சில மாதங்களுக்கு முன்னால் சிதறிய போது அதில் இருந்த விஞ்ஞானிகள் இவர்கள். இவர்களில் கிறிஸ்டா மெகாலிப், ஜீடித் ரெஸ்னிக் இருவரும் பெண்கள். கிறிஸ்டா மெகாலிப் பள்ளிக்கூட ஆசிரியை.

8 முன்னாள் பிலிப்பைன்ஸ் அதிபர் மார்க் கோஸ்.

9 பல தில்லுமுல்லுகள் செய்து மார்க்கோஸ் தான் பிலிப்பைன்ஸ் அதிபர் என்று அறிவிக்கப்பட்டதும் பிலிப்பைன்ஸ் மக்கள் கொதித்து எழுந்து இவர் பின்னால் நின்றனர். இவர் பயங்கர உள்நாட்டுச் சண்டைக்குப் பிறகு அதிபராக ஆனவர். மக்களால்தேர்ந்தெடுக்கப்பட்டவர். இந்தப்பெண்ணின் பெயர் இருதி அக்கிரோ

தாம்பிரவருணி.




காலத்தால் அழியாத
காவியம் படைக்கும்
சில நேரங்கள்.
கடிகாரங்கள்
ஹேண்ட்வௌண்ட் ● ஆட்டோமேடிக்
குவார்ட்ஸ்
நாட்டிற்கு நல்ல நேரம் காட்டுவோர்
Sista's-HMT-1328-Tam

# கோலங்கள் குறைவதில்லை

ஆச்சரியப்பட்டுப் போகிறாள் காதம்பரி. எப்படி இந்த மக்களால் அசுரத்தனமான காரியங்களில் சுலபமாக இறங்கிவிட முடிகிறது. ஆஸ்பத்திரியில் டாக்டரிடம் ஊசிப் போட்டுக்கொள்வதென்றால் அரண்டுபோய் விடுகிறவர்கள், அலட்சியமாக ஆவியோட்டு பவனின் ஆணைக்கு சம்மதிக்கிறார்கள். அவன் ஆட்டி வைத்தபடியெல்லாம் ஆடுகிறார்கள். சித்திரவதைக்குக் கூட அஞ்சுவதில்லையே...!

"எத்தனை வருஷம் முந்தியாம் இது...?" ஆர்வத்தோடு கேட்கிறார் கிருபாகரன்.

"பத்து வருஷமிருக்கும்கறாங்க..."

"தட் மீன்ஸ்... அந்தப் பெண்ணுக்கு பதினஞ்சு வருஷந்தான் இருந்திருக்கும். பிகாஸ், இப்ப அவளுக்கு இருபத்தஞ்சுக்கு மேலே சொல்ல முடியாது. அந்த வயசிலேயேவா அப்படி செய்ய தோணித்து..."

"அசட்டு சாமர்த்தியம்னு நாங்க சொல்லுவோம். இந்த மாதிரி பாமர ஜனங்களுக்கு அது கொஞ்சம் ஜாஸ்தியே இருக்கும். ஒருவேளை ஏதானு சினிமாவிலேயும் இப்படி ஒரு கதையைப் பார்த்திருக்கலாம். இப்பதான் தண்ணி லைட்டுனு அடிப்படை வசதி நுழையாத கிராமத்திலெல்லாங்கூட டூரிங் சினிமா நுழைஞ்சிடுத்தே. நம்ம ஜனங்களுக்கு அதிலே இருக்கிற ஈடுபாட்டை சொல்ல வேறே வேணுமா? அதென்னவோ, எவனோ

16

பிடிக்காதவன் பரிசம் போட வீரப்ப மாட்டேன், பிடிக்கலேன்னு தைரியமா சொல்ல முடியாம, பேய் பிடிச்ச மாதிரி பண்ணி காட்டியிருக்கு. அது அப்புறம் வினையா..."

"அதுக்கு முன்னாலே அவ சைல்ட் ஹுட் பத்தி..."

"இன்னும் டீடெய்ல்டா விசாரிக்கணும். கேட்ட மட்டிலே இவங்க சொல்றாங்க. ரொம்ப கொயட். அவ பாட்டுக்கு ஒரு மூலையிலே உக்காந்திருப்பா., ஏதானு சொன்னா பண்ணுவ, இல்லாதபோனா கம்முனு இருப்ப. அவளாலே தகராறே கிடையாதுன்னு மே பீ அப்பவே அவளுக்கு லேசா இந்த ப்ராப்ளம் இருந்திருக்கலாம்...

"கல்யாணம் செஞ்சுக்கறேன்னு வந்தவனை பிடிக்கலேன்னு சொல்றதை விட, கல்யாணத்தை பத்தியே கூட ஒரு பயமிருந்திருக்கலாமோ என்னவோ? நம்ம ஊர் பெண்களுக்கு கல்யாணத்துக்கு முன்னாடி அதைப் பத்தி என்ன தெரியும்... கல்யாணம், செக்ஸ்னாலே அலர்ஜி உண்டாகிற மாதிரினா அவங்களை வளர்க்கிறோம்..."

ஒரேயடியா அப்படிச் சொல்லிட முடியாது. ஒரு கூட்டுக் குடும்பத்திலே வளர்ற குழந்தைகளுக்கு அட்வான்டேஜ் நிச்சயம் இருக்கு. நேரா செக்ஸைப் பத்தி தெரிஞ்சுக்கறதில்லையே தவிர, கல்யாணத்தின் மூலமா நேரக் கூடிய உறவுகளைப் பத்தி.. ஒருத்தருக்கொருத்தர் சரிக்கட்டிண்டு சம்சாரம் நடத்தறதைப் பத்தியெல்லாம் நிறையாவே தெரிஞ்சுக்கறாங்க. மேலும்,

கோமளா வரதன்

இந்தக் காலத்து பெண்கள் பட்டணத்திலே வளர்றவங்களெல்லாம் என்னலாம் படிக்கறுங்க... பார்த்துத் தெரிஞ்சுக்கறுங்க... கிராமத்திலே வேணு..."

"அப்கோர்ஸ், வாழ்க்கையிலே நம்ம அப்ரோச்சே வேறே. நாம படிச்ச மேல் நாட்டு தியரியெல்லாம் இங்கே முழுக்க முழுக்கப் பொருந்தாதுதான்..."

நம்ம நாட்டிலே பெரிய கோளாறே இது தானென்னு தோணுது. இங்கிலீஷ், இங்கிலீஷ்லே படிப்புன்னு அலையறது. நம்ம மண்ணிலேர்ந்து விலகிப் போயிடறோம். ம்... இது ஒரு பெரிய ஸப்ஜெக்ட். இன்னொரு நாள் தான் டிஸ்கஸ் பண்ணணும்...

"எனிவே, இந்த பெண்ணின் கேஸிலே அவங்க பேயோட்டறதுக்கு மந்திரவாதியை வரவழைச்சுட்டாங்க..."

"ம், அவன் பேயோட்டப் பார்த்து முடியாம போனதும் இன்னொருத்தன், அப்புறம் இன்னொருத்தன்னு, இல்லாத பேயை எப்படி ஓட்டறது... மாறி மாறி பத்து வருஷமா மந்திரம், தந்திரம், புகை... அடி உதையிலேர்ந்து சித்திரவதை வரை பட்டுபட்டு இப்ப நிஜமாகவே இந்த கண்டிஷனுக்கு அந்தப் பெண் வந்துட்டான்னு தோணறது..."

"பயங்கரம்! நல்லவேளை இப்பவானு இங்கே கூட்டிட்டு வந்தாங்களே, இன்னொரு மந்திரவாதியைக் கூப்பிடாமே இப்ப கொஞ்சம் கொயட்டா இருக்கிறதா சொல்றுங்க. எனிவே, உங்களைத் தாசை இல்லென்னு, இவ்வளவு தூரம் இந்த கேஸ் ஹிஸ்டரியை கண்டு பிடிச்சிருக்க முடியாது காதம்பரி... ரொம்ப பொறுமையா விசாரிச்சிருக்கீங்க..."

கிருபாகரனின் பாராட்டுதலை ஏற்று நிதானமாகத் தன் அறைக்கு நடந்து வருகையில் மனம் மட்டும் அசை போடுகிறது.

இப்படி எல்லாருமே அவளை இங்கு பாராட்டுகிறார்கள்.

கிருபாகரன், சந்தர், மற்ற டாக்டர்கள், குஸுமா, விமலா எல்லோர் கணிப்பிலும் அவள் உயர்ந்து நிற்க, ஒருவன் மதிப்பீட்டில் மட்டும் தாழ்ந்துவிட்டாள்...

பிரபு...! அவன் மதிப்பில் மட்டும் குறைந்து... அவளுடைய தவறு அவனிடந்தான் தவறு...?

எப்படித் தவறாகும்? நேசிக்கிறேன் என்பவர்கள் நேசத்தையெல்லாம் அங்கீகரித்துவிட முடியுமா? அவளுடைய விருப்பம் என்று ஒன்று கணக்கேயில்லையா...? உண்டு என்றுதான் அவனும் நினைத்திருக்க வேண்டும். அதுதான் ஒதுங்கிக்கொண்டுவிட்டான். இனிமேல் நினைத்து வருந்தி...

அன்று ஏகப்பட்ட வேலை விகாஸில். முடித்துக் கொண்டு காதம்பரி நுழையும் சத்தம் கேட்டு உள்ளறையிலிருந்து நாஸ் எட்டிப் பார்க்கிறான்.

"எஷ்டு லேட்டாயிடுத்து...! நானு ஹோகி காப்பி தந்துபிட்டே..." அவனே முன் யோசனையாகப் போய்க்காப்பி வாங்கி வந்து விட்டானும். பிளாஸ்கையும் சிறிய டிபன் டப்பாவையும் கொணர்ந்து மேஜை மேல் வைக்கிறான்.

"சாயபரு பந்து காயிதா இத்தரு..."

எந்த ஐயா வந்து காத்திருந்தார்...?

"அதான்..." எப்படிச் சொல்வதென்று தெரியாமல் விழித்துவிட்டு, "ஆ...!" வென்று சட்டைப் பையிலிருந்து ஒரு கவரை எடுத்து நீட்டுகிறான்.

நல்ல பசி. டிபனை விண்டு வாயில் போட்டுக் கொண்டே, முழங்கையால் கவரை அழுத்தி மற்ற கையால் கிழித்து கடிதத்தை உருவி, பிரிக்கிறாள்.

ஆங்கிலத்தில், அழகான கையெழுத்தில் நாலே வரிகள்...

அன்பார்ந்த காதம்பரி...

உன்னைப் பார்க்க வேண்டுமென வந்தேன். இத்தனை நேரம் காத்திருந்தேன். ஒரு வேளை நானும் பேஷண்டாயிருந்து அப்பாயின்ட்மெண்ட் வாங்கிக்கொண்டு வந்திருக்க வேண்டுமோ... நீ ஒப்புக் கொள்ளவில்லையாயினும் கிட்டத்தட்ட நானும் ஒரு......

புள்ளிகளில் நிறுத்தி, பிரபு என்று கையெழுத்துப் போட்டிருந்தான். ம்ம்மென்று மூச்சை இழுத்துவிடுகிறாள் காதம்பரி. மனம் திவ்வென்று லேசாகிப் போனாற்போலிருக்கிறது. எத்தனை விதமான சந்தேகங்கள் பிடுங்கித் தின்றிருக்கின்றன. இத்தனை நாளில். அவன் என்ன நினைத்துக் கொண்டானோவென்று எவ்வளவு வேதனைப் பட்டாள்.

அவன் ஒன்றும் நினைத்துக் கொள்ள வில்லை. எப்போதும் போலத்தான் இருந்திருக்கிறான்...

எப்போதும் போலத்தானு... ஒரு போன் கூடச் செய்யவில்லை. ஒரு ஹலோ இல்லை...

வேலைத் தொந்திரவோ என்னவோ... ஆ... அப்படிக் கூட ஒரு வேலையா? வரட்டும், முகம் கொடுத்துப் பேசக் கூடாது... அழவைக்க வேண்டும்... ஐயோ பாவம்.. இன்று வந்திருந்ததை விட்டு விட்டாள், இத்தனை நேரம் காத்திருந்ததை விட்டுவிட்டாள். வராததை வைத்துக் கொண்டு வம்புக்கு போவது நன்றாய்த்தானிருக்கிறது.

லெட்டரில் இருந்த நாலு வரிகளை மீண்டும் மீண்டும் படிக்கிறாள்.

ஓஹோ!.. அவனும் ஒரு பேஷண்டாமே... பாவம், என்ன நோயோ... இவளைப் போல அலுங்காமல் நலுங்காமல் அழகாய், ஆரோக்கியமாய்... உற்சாகமும் அட்டகாசமுமாய் இருப்பவர்களுக்கெல்லாம் ஒரு பெண்ணிடம் ஈடுபாடு தோன்றிவிட்டால்... வேறென்ன நோயாக இருக்க முடியும்...

அடிக் கள்ளி!...யென்று இடிக்கிறது மனம். நேரில் பார்த்தால், பேசினால் பராமுகமாய் இருந்துவிட்டு, அவன் சும்மா யிருந்தால் போன் கூட செய்யவில்லையே என்று தவித்து, வந்திருந்தான் என்றவுடன், குதி போடுவது எதில் சேர்த்தி...?

உள் மனத்தில் அவனுக்கு, அவன் சிநேகத்துக்கு இவ்வளவு வரவேற்பு இருக்கும் போது, ஏன் இந்த வெளிவேஷம்? நீ ஏன் நார்மலாக இருக்கக் கூடாது காதம்பரி யென்று அவன் கேட்டது சரிதானே...?

''என்னப்பா, வழி தெரிஞ்சுதா... எத்தனை நாளாச்சு, ஆளை கண்ணிலேயே காணலியே...''

கிட்டத்தட்ட இருபது நாட்களுக்குப் பின் வரும் பிரபுவை தோட்டத்திலேயே மடக்கு கிறான் ராஜப்பா.

''பாவம் ரொம்ப குடும்பத் தொல்லை. பிக்கல் பிடுங்கல் ஜாஸ்தி. ஆபீஸை விட்டா வீடு, வீட்டுக் கவலைன்னு அவர் எத்தனை நாள் சமாளிப்பார், பாவம்...'' கிண்டலாய் விமலா.

''குடும்பக் கவலை ஒண்ணுதானா மனுஷனுக்கு... பிஸினஸ்லே எவ்வளவோ இருக்கு...''

''சொல்லுப்பா கொஞ்சம். நாளன்னிக்கு எனக்கு டூர் போகணும்னு, எப்ப பார்த்தா





இப்படியும் சிலர் இருக்கிறார்கள். இதற்கு என்ன செய்ய முடியும்?

நான் என் புக்ககத்தில் கடைசி நாட்டுப் பெண். என் புக்ககத்தில் மொத்தம் 4 பிள்ளைகள், 2 பெண்கள். என் மாமியார் பெரிய பணக்காரி. 2 பெண்களுக்குக் கல்யாணத்திற்கு வைர அட்டிகையிலிருந்து வெள்ளிச் சீர் (சொல்லினால் போதாது) அவ்வளவு செய்துள்ளார். பிறகு அவர்களுக்குப் பிரசவம், குழந்தைக்கு நகை, குழந்தைகள் கல்யாணத்திற்குப் பரிசு என்று பெண்களுக்கும் அவர்களுடைய குழந்தைகளுக்கும் நிறையவே செய்து, இப்போது கூட தன் பெண் வயிற்றுப் பேத்தி அமெரிக்காவிலிருந்து வந்த போது தன் வைரத் தோட்டையும் அவிழ்த்துக் கொடுத்துவிட்டார். கேட்டால் அவளிடம் கடன் வாங்கி இருந்ததாகச் சொல்கிறார். அந்தக் காலத்திலேயே அவர் பெண்கள் கான்வென்ட் ஸ்கூலில் படித்துள்ளார்கள்.

பிள்ளைகளையோ அந்தக் காலத்திலேயே சாதாரண ஸ்கூலில் சேர்த்து, அவரவர்கள் படி சுதந்திரம் என்னும் சொல்லால் விட்டு விட்டார்கள். 17/18 வயதுக் குழந்தைகள் எதிர்காலம் பற்றி என்ன முடிவு செய்ய முடியும்? பெற்றோர்கள் அல்லவோ கலந்துரையாடி வழிகாட்ட வேண்டும்? மாட்டுப் பெண்களுக்கு அவர் செய்தது எல்லாம் மூன்று பவுன் நகைதான்.

திருமதி. கணேஷ்.

றாய் என்ன டூர்னு மூஞ்சியை தூக்கி வெச்சுக்கறே. ஆபீஸ்னு, அந்தந்த வேலை கரெக்டா நடக்க வேண்டாமோ...

ராஜப்பா மாதத்தில் இருபது நாள் டூர் போய் விடுகிறானென்று விமலாவுக்கு ஏக மனத்தாங்கல். சமயம் வரும்போதெல்லாம் சாடத் தவறுவதில்லை.

"....இவராலல் இப்படி கிளம்பிப்போயிடறார். எப்போ வருவாரோன்னு வாசலை பார்க்க வேண்டியிருக்கிறப்பல்லாம் எனக்கு ஏன்தான் கல்யாணம் பண்ணிக்கிட்டோமோன்னு இருக்கு. இந்த பிரபுவாட்டம், காதம்பரியாட்டமெல்லாம் ஜாலியா இல்லாம ஏமாந்துட்ட மாதிரி..."

"பார்த்தீங்களா, இதைத்தான் வாலறுந்த நரி கதைங்கறது. தான் ஏன் கல்யாணம் பண்ணிக்கிட்டோமோன்னு இருக்கிறவங்க நான் பண்ணிக்கலையேன்னு வருத்தப்படறாங்கன்னு..."

"போறும் போறும் பிரபு! ஜெயா கல்யாணத்துக்கு வந்திருந்தப்போ உங்கம்மா எல்லார்கிட்டயும் சொல்லி எவ்வளவு வருத்தப் பட்டுண்டாங்க தெரியுமா...?"

"சொல்லி அலுத்துப் போயிருக்கணுமே அம்மாவுக்கு... பச... நிஜமாவே விமலா. என்னவோ ஒரு மாசமா ஒரே வேலை. என்னன்னு சொல்லத் தெரியல்லே. இப்பக் கூட ஒரு டெண்டர் சமாசாரம் ஒண்ணு ரொம்ப இழுத்தடிக்கிறது... இதெல்லாம் அம்மாவுக்குப் புரியுமா... விடு. சாரதா வீட்டிலேருந்து பிரசாதம் அனுப்பியிருக்காங்க. கோவில்லே ஏதோ விசேஷ பூஜை பண்ணுறாங்களாம். உங்களுக்கு கொடுக்கச் சொல்லி, அப்புறம் டாக்டர் காதம்பரிக்குக் கூடக் கொடுக்கச் சொல்லி... விகாஸுக்கு நாலஞ்சு தரம் போனதிலேயே அவனுக்குக் கொஞ்சம் இம்ப்ரூவ்மெண்ட் இருக்காமே... உங்க ஆளு மசி இருக்கானா...?"

"பார்த்துண்டு வரேன்..." என்று தங்கள் பிரசாதத்தை வாங்கிக் கொண்டு உள்ளே போகிறாள் விமலா. ராஜப்பாவோடு நிதானமாய் ஏதோ பேச்சுக் கொடுத்துக் கொண்டே மேலே நிமிர்ந்து பார்க்கிறான் பிரபு. குவியல் குவியலாய் மேகங்கள். யானைக் கூட்டங்களாய், நகரும் குன்றுகளாய், ஏதேதோ வடிவங்களில் நகர்ந்து கொண்டேயிருக்கின்றன.

பருவமழை காலத்துக்கு முன்னோடியாய் கொஞ்ச நாட்கள் இப்படித்தான் மேகங்கள் நகரும். ஒரு வாரம் பத்து நாட்களில் இவையே கறுத்து, கனத்து, திரண்டு மழையாக இறங்கும். அவள் இதையெல்லாம் கவனித்திருப்பாளோ..."

இருக்க முடியாது. போன மான்சூனுக்கு இங்கே வந்துவிட்டிருந்தாளோ... அவளுக்கு இதையெல்லாம் காட்ட வேண்டும். ஒரு நாள் மழையில் காவிரியில் நீர் பெருகி கரை புரண்டோடுவதைக் காட்ட வேண்டும். ஷிம்ஷாவுக்கும் சிவசமுத்திரத்துக்கும் அழைத்துக் கொண்டு போக வேண்டும். சிவசமுத்திரத்தில் நீர் வீழ்ச்சிக்கு ஏன் பிளப் — Bluff என்று பெயர் கேட்க வேண்டும். ஜோவென்று இறங்கும் நீர் தாரையின் அடியில் நிறுத்தி...

"மசியைக் காணலியே... மாமியார் கூட மகிழம்பூவைக் கோத்து வெச்சுண்டு, கொடுத்தனுப்பறதுக்கு அவனை தேடிண்டு இருக்கார்..." என்று விமலா வர,

"சரி, கொடு. நானே கொண்டு போய் கொடுக்கிறேன்..." என்று வாங்கிக்கொண்டு கிளம்புகிறான் பிரபு.

ஒரு பக்கம் துடிப்பு இருந்தாலும் பின்னணியில் கொஞ்சம் தயக்கமும் இருக்கத்தான் செய்கிறது.

(தொடரும்)

# KEEPING YOU ON THE TIP OF YOUR TOES...



# ANCHOR®

## NURSES' STOCKINGS

For Day And Night Comfort

Mfrs: WILLIAM INDUSTRIES,
Anchor House, 11-Sheriff Devji Street, (Chakla Street), Bombay-400 003.
Phone: 320477 – 346374 – 348478. Fact: 4131052 – 4130941.

பிரசாந்தி



வசந்தா

விஜயா



சரஸ்வதி



# இம்மாத

## முதல் பரிசு: இஸ்திரிப் பெட்டி
### வெஜிடபிள் அடை பிரதமன்

**தேவையான பொருட்கள்:**

பால் — 2 லிட்டர்,
முட்டை கோஸ் — ¼ கிலோ,
சர்க்கரை — ½ கிலோ,
ஏலக்காய் — ஐந்து,
முந்திரி பருப்பு — 25 கிராம்,
நெய் — 2 ஸ்பூன்.

**செய்முறை:**

கோஸை கறிக்கு நறுக்குவதுபோல்பொடி பொடியாக நறுக்க வேண்டும். (ரொம்பவும் சிறியதாக நறுக்க வேண்டாம்.) பிறகு தண்ணீர் ஊற்றி நன்றாகக் கழுவ வேண்டும். நறுக்கி வைத்து இருக்கும் கோஸை குக்கரில் வைத்துத் தண்ணீர் இல்லாமல் சிறிது நேரம் வேக வைக்க வேண்டும்.

2 லிட்டர் பாலையும் அடி கனமான பாத்திரத்தில் ஊற்றி 1 லிட்டர் பாலாகக் குறுக்க வேண்டும். பிறகு வெந்த கேபேஜை இரண்டு மூன்று தடவை நன்றாகத் தண்ணீர் ஊற்றி அலச வேண்டும். (அப்போதுதான் கோஸ் வாசனை பாயசத்தில் வராது) பிறகு தண்ணீர் இல்லாமல் பிழிந்து குறுகி வைத்து இருக்கும் பாலில் போட வேண்டும். பிறகு சர்க்கரையும் போட்டுக் கொதிக்க வைக்க வேண்டும். பாயசத்தைக் கீழே இறக்கி வைத்து ஏலக்காய் பொடி செய்து முந்திரிப் பருப்பையும்நெய்யில்வறுத்துப்போடவேண்டும். இது சாப்பிடுவதற்கு பால் அடை பிரதமன் போல் இருக்கும்.

— வசந்தா வெங்கடாசலம், சென்னை—34.

## இரண்டாம் பரிசு: நகைப்பெட்டி
### பலாக் கொட்டை பாயஸம்

**தேவையான பொருட்கள்:**

பலாக் கொட்டை (கேடு இல்லாதது) — 25,
வெல்லம் — ½ கிலோ,
இளம் தேங்காய் — 1, (பெரியது)
ஏலக்காய் — 6,
வறுக்க நெய் — 2 டேபிள் ஸ்பூன்,
தேங்காய் கீறல் — ஒரு சின்ன கப்.

**செய்முறை:**

பலாக்கொட்டையின் மேல் தோலை எடுத்து அடுப்பில் தண்ணீரில் முழுதாக வேக வைக்கவும். நன்கு வெந்த பின் அதன் மேல் உள்ள சன்னத் தோலை உரித்து சூடாறியபின் மிக்ஸியில் கொஞ்சம் தண்ணீர் சேர்த்து அரைத்துவிழுதாக்கிக்கொள்ளவும். அந்த விழுதை ஒரு வாய் அகலமான பாத்திரத்தில் போட்டு 2 டம்ளர் விழுதுக்கு 4 டம்ளர் வெல்லம் சேர்த்து நன்கு கொதிக்க விடவும்.

கொதித்தபின் இளம் தேங்காயை துருவி மிக்ஸியில் முதல் பால், இரண்டாம் பால் என தனித்தனியே எடுத்து, இரண்டாம்

# இல்லத்தரசி

தேங்காய் (துருவியது) — ½ கப்.
பச்சரிசி — 2 மேஜைக் கரண்டி.
பால் — 100 மி. லி.
பச்சைக் கற்பூரம் — ஒரு துளி.
முந்திரிப் பருப்பு —6.
கிஸ்மிஸ் — 10.

பாலை சேர்த்து முதலில் விட்டுக் கொதிக்க விடவும். நன்கு கொதித்த பின் இறக்கி வைத்து பின்னர் முதல் பாலை சேர்க்கவும். கீறி வைத்த தேங்காயை நெய்யில் சிவக்க வறுத்து அதில் போடவும். ஏலக்காயையும் பொடித்துப் போடவும். இது மலையாள சக்க பிரதமன் போல் மிகவும் ருசியாக இருக்கும். இப்பொழுது பலாப்பழ சீஸனும்தானே.

— எஸ். சரஸ்வதி, சென்னை—90.

மூன்றும் பரிசு : டேபிள் செட்

**சர்க்கரை வள்ளிக்கிழங்கு பாயஸம்**

தேவையான பொருட்கள்:

சர்க்கரை வள்ளிக்கிழங்கு — 4 (நான்கு பெரியது)
வெல்லம் (தூள் செய்தது) — 1½ கப்.

செய்முறை:

முதலில் கிழங்கை நன்முகக் கழுவி துண்டு துண்டாக்கி வேக வைக்கவும். நன்முக வெந்த பின்பு தோலை உரித்து கட்டியில்லாமல் மசித்துக் கொள்ளவும். இல்லாவிடில் ஆட்டுக் கல்லில் போட்டுத் தண்ணீர் விடாமல் மசிய அரைத்துக் கொள்ள வேண்டும். பாலைக் காய்ச்சி வைத்துக் கொள்ளவும். பச்சரிசியை ¼ மணி நேரம் ஊற வைக்க வேண்டும். ஊறிய பின்பு அரிசியுடன் தேங்காயையும் வைத்து நன்முக மசிய அரைத்துக் கொள்ளவும்.

கிழங்குக் கலவையும், அரிசி தேங்காய் கலவையும் ஒன்முக தண்ணீர் விட்டு கலக்கவும் (1½ கப் கலவைக்கு 2 கப் தண்ணீர் விகிதம்) கலந்து அடுப்பில் கொதிக்க வைக்க வேண்டும். கொதித்த பின்பு பொடி செய்த வெல்லத் தூளைப் போட்டு நன்கு கொதிக்க விடவும். இதனுடன் வறுத்த முந்திரிப்

இம்மாத இல்லத்தரசிக்கு நடுவர்கள் : அபிராமி மண்டலி, ஸ்ரீரங்கம். விஜயா சுப்ரமணியன், அனுசூயா, ரேவதி முத்துஸ்வாமி, ராஜி வெங்கட்ராமன், லக்ஷ்மி, வசுமதி ரங்கநாதன்.



# காந்தி கிராமம் தயாரிக்கும் தரமான வீட்டு மருந்துகள் மற்றும் டானிக்குகள்

## ஒவ்வொரு குடும்பத்திலும் கைவசம் இருக்க வேண்டியவை

### வீட்டு மருந்துகள்

**ஓமவாட்டர்** — அஜீரணத்தை முழுக்க குணப்படுத்துகிறது.

**இஞ்சி எலுமிச்சை சிரப்** – பசியைத் தூண்டுகிறது.

**இஞ்சி முரபா** – (ஜிஞ்சர் முரபா) (அதரக்) – ஜீரண சக்தியை அதிகரிக்கிறது.

**பாவன ஜீரகம்** – தலைச் சுற்றலை நிறுத்துகிறது. வாயு உபாதையை போக்குகிறது.

**பாவன கடுக்காய்** – ஜீரண அபிவிருத்திக்கும் மலச்சிக்கலைப் போக்கவும் பயன்படுகிறது.

**ஆயுர்வேத பற்பொடி** – தேர்ந்தெடுக்கப்பட்ட மூலிகைகளிலிருந்து தயாரிக்கப் படுகிறது. வலிமையான பற்கள், ஆரோக்கியமான ஈறுகளைத் தருகிறது. வாய் நாற்றத்தை போக்குகிறது.

**நீலி பிருங்காதி தைலம்** – (கூந்தல் எண்ணெய்) - இள நரையையும் முடி உதிர்வதையும் தடுக்கிறது.



### ஆரோக்கிய டானிக்குகள்

**குல்கந்து** – சிறந்த மலமிளக்கி. புதிய ரோஜாப் பூக்கள், சர்க்கரை, தேன் ஆகியவை கலந்து கொண்டு தயாரிக்கப் படுகிறது. கர்ப்பிணிகளுக்குச் சிறந்தது.

**அஸ்வகந்தா லேகியம்** – இரத்த சோகையைத் தடுக்கிறது. ரத்தத்தை சுத்தி செய்கிறது. உடலைத் தேற்றுகிறது.

**சௌபாக்கிய சுண்டி** – சிறந்த ஜீரண மருந்து. பிரசவத்திற்குப் பின் பயன்படுத்த மிக சிறந்தது.

**கருணை லேகியம்** – மூலத்தை தடுக்கிறது.

**தேத்தாங் கொட்டை லேகியம்** – நோயால் பாதிக்கப் பட்டவர்கள் உடல் தேற சிறந்த டானிக்.

**ரோஜாமொக்கு லேகியம்** – இரைப்பை புண்ணை ஆற்றுகிறது.

**கூஷ்மாண்ட லேகியம்** – பசியைத் தூண்டி ஜீரண சக்தியை அதிகரிக்கிறது பிரைமரி காம்ப்ளெக்ஸ் நோயைப் போக்கவும் பயன்படுகிறது.



**ஊட்டச் சத்து நிறைந்த புதிய சக்தி மால்ட் 4 வாசனைகளில் கிடைக்கிறது.**

**சமையல் பொடிகளும் தயார் செய்யப்படுகின்றன.**

காந்தி கிராமம் காந்தியின் லட்சியங்களின் வழியில் இயங்கி வருகிறது.




லெட்சுமி சேவா சங்கம்,
காந்தி கிராமம் 624 302.
அண்ணா மாவட்டம்.
(தமிழ்நாடு).

கிடைக்குமிடம் : காந்தி கிராம அங்காடிகள் (ஷோரூம்)
(காந்தி கிராமம், மதுரை, திண்டுக்கல், வாடிப்பட்டி, கொடை ரோடு,
பழனி, திருநெல்வேலி, பள்ளப்பட்டி, அம்பாசமுத்திரம்) காதி கிராமோத்யோக பவன்கள்,
சர்வோதய சங்கங்கள், எல்லா (டிரக்கிஸ்ட் & கெமிஸ்ட்) பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கும்.

இவைகளைத் தவிர சித்த, ஆயுர்வேத மருந்துகள்
250க்கும் மேற்பட்டவைகள் தயாராகிறது.

maa(s) 8325 TAM

# புக் ஷெல்ஃப்

## இலங்கைத் தமிழர் போராட்ட வரலாறு

நாளும் சித்திரவதைப்படுதலையே வாழ்வாக வாழ்ந்து வரும் இலங்கைத் தமிழரின் நிலையை கண்ணீர் வரலாறாகப் படைத்திருக்கிறார் ஆசிரியர் பாலை சந்திரன். விலை ரூ. 25/—

(பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை—17.)

## இந்தியச் சிறுகதைகள்

இந்தியாவின் பதினைந்து முக்கிய மொழிகளிலிருந்து மிகச் சிறந்த சிறுகதைகளைத் தொகுத்துத் தந்துள்ளார் சரஸ்வதி ராம்நாத். பிறமொழிச் சிறுகதைகளில் ஆர்வமுள்ளவர்களுக்கு நல்விருந்து.

விலை ரூ. 20/—

## கிண்டி ஹோல்டான்

தமிழில் முன்னணி எழுத்தாளரான பி. வி. ஆரின் சிறந்த கதைகளில் ஒன்று. கிண்டி குதிரைப் பந்தயத்தை மையமாகக் கொண்டது. விலை ரூ. 17/—

## பூ வேலி

பிரபலமான வாரப் பத்திரிகையில் தொடர்கதையாக வந்த பி. வி. ஆரின் நாவல். ஆண்களின் ஆழமான, வேஷமான காதலைச் சித்திரிக்கிறது. விலை ரூ. 17.50/—

## நீரோட்டம்

வாழ்வில் கஷ்டப்பட்டு படித்து உழைத்து முன்னுக்கு வந்த இளைஞன் ஒருவனின் கதையை நீரோட்டமாகப் படைத்துள்ளார் ஆசிரியர் பி. வி. ஆர். விலை ரூ. 21/—

## GH

சென்னை அரசாங்க பொது மருத்துவமனையை மையமாக வைத்து பி. வி. ஆரால் எழுதப்பட்ட சுவையான நாவல். விலை ரூ. 16.50/—

## மௌனமாய்ப் பெய்த மழை

இரா. வேலுச்சாமி மண்ணில் கால் பதித்து எழுதிய அருமையான கவிதைகள் வாழ்வின் சுவைகளை, அவலங்களைக் கூறுகிறார். விலை ரூ. 7.50/—

## என்ன? ஏன்? எப்படி?

மாணவர்களுக்கும் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருப்பவர்களுக்கும் தேவையான நூல். பல்வேறு விஷயங்களை இரு நூறு கேள்வி பதில் வடிவங்களில் தந்துள்ளார் எஸ். சங்கரன். விலை ரூ. 13/—

மேற்கண்ட ஏழு நூல்களின் பதிப்பாளர் — கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை—17.

## காணிக்கை

நான்கு ஓரங்க நாடகங்களில் புராணம், காவியக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு சுவையாகப் பின்னியுள்ளார் ஆசிரியர் மதுரை ஜேஸன். விலை ரூ. 5/—

(எலெஸன்ஷியல் பப்ளிகேஷன்ஸ், 1719 திருச்சிப் பாதை, கோயம்புத்தூர் — 641 045.)

## மாணவச் செல்வங்களுக்கு போப்பாண்டவர்

போப்பாண்டவர் இரண்டாம் அருள் சின்னப்பருடைய வாழ்க்கையினையும், பாரதத்திற்கு அவர் சமீபத்தில் செய்த விஜயத்தினையும் கூறும் நூல். ஆசிரியர் கவியழகன். விலை ரூ. 9/—

(சோமு புத்தக நிலையம், 42, அப்பர்சாமி கோவில் தெரு, மயிலாப்பூர், சென்னை—4.)

## தெய்வத் திருப்பாடல்கள்

கவிஞர் ஏ. நாராயணன் ஸ்கந்த மாதா பதிகத்தையும், ஸ்கந்தகுரு வெண்பாவையும் மற்றும் பல தெய்வப் பாடல்களையும் இயற்றியுள்ளார். விலை ரூ. 6.50/—

## அழகிய வாழை

குழந்தைகள் பாடும் வகையில் எளிய பாடல்களை இயற்றியுள்ளார் கவிஞர் ஏ. நாராயணன்.

விலை ரூ. 9/—

(இரண்டு புத்தகங்களின் பதிப்பாளர் கற்பூரம் பதிப்பகம், 29B, மாணிக்க வாசகர் தெரு, அம்மாப்பேட்டை, சேலம் — 636 003.)

## ஆனந்தமாய் வாழ ஆசார்யாள் வழி முறைகள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய பரமாச்சார்ய ஸ்வாமிகளின் அருளுரைகளைத் தொகுத்துத் தந்துள்ளார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 12/—

## ஸ்ரீ துர்கா தேவி ஸ்தோத்திர மாலை

ராகு கால பூஜை, வழிபடும் முறைகள், ஸ்தோத்திரங்கள் மற்றும் பாடல்களைத் தொகுத்துள்ளார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 2.25/—

## திருமணம் கைகூடும் திருமணஞ்சேரி

திருமணமாகாதவர்கள் திருமணஞ்சேரி சென்று வழிபட்டால் நினைத்த பலன் கூடும் என வழிபடும் முறைகள் பற்றி விரிவாகக் கூறுகிறார் அம்மன் சத்திய நாதன்.

## ஸ்ரீ ராகவேந்திர மகிமை

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் முழுமையான வரலாற்றையும், அவர் செய்த அற்புதங்கள், மகிமைகள் பற்றிக் கூறுகிறார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 35/—

## சௌபாக்கியமளிக்கும் ஸ்ரீ சந்தோஷி கவசம்

ஸ்ரீ சந்தோஷி மாதா பூஜைக்கான விரத முறை, வரலாறு, பூஜைகள், பாடல்கள் இவற்றைத் தொகுத்துத் தந்துள்ளனர் கவிஞர் சக்திதாசனும், அம்மன் சத்தியநாதனும். விலை ரூ. 2.50/—

(மேற்கண்ட ஐந்து புத்தகங்களின் பதிப்பாளர் — அம்மன் பதிப்பகம், 39, வி.எம். தெரு, இராயப்பேட்டை, சென்னை—4.)

# புக் ஷெல்ஃப்

## இலங்கைத் தமிழர் போராட்ட வரலாறு

நாளும் சித்திரவதைப்படுதலையே வாழ்வாக வாழ்ந்து வரும் இலங்கைத் தமிழரின் நிலையை கண்ணீர் வரலாறாகப் படைத்திருக்கிறார் ஆசிரியர் பாலை சந்திரன். விலை ரூ. 25/—

(பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை — 17.)

## இந்தியச் சிறுகதைகள்

இந்தியாவின் பதினைந்து முக்கிய மொழிகளிலிருந்து மிகச் சிறந்த சிறுகதைகளைத் தொகுத்துத் தந்துள்ளார் சரஸ்வதி ராம்நாத். பிறமொழிச் சிறுகதைகளில் ஆர்வமுள்ளவர்களுக்கு நல்விருந்து.

விலை ரூ. 20/—

## கிண்டி ஹோல்டான்

தமிழில் முன்னணி எழுத்தாளரான பி. வி. ஆரின் சிறந்த கதைகளில் ஒன்று. கிண்டி குதிரைப் பந்தயத்தை மையமாகக் கொண்டது. விலை ரூ. 17/—

## பூ வேலி

பிரபலமான வாரப் பத்திரிகையில் தொடர்கதையாக வந்த பி. வி. ஆரின் நாவல். ஆண்களின் ஆழமான, வேஷமான காதலைச் சித்திரிக்கிறது. விலை ரூ. 17.50/—

## நீரோட்டம்

வாழ்வில் கஷ்டப்பட்டு படித்து உழைத்து முன்னுக்கு வந்த இளைஞன் ஒருவனின் கதையை நீரோட்டமாகப் படைத்துள்ளார் ஆசிரியர் பி. வி. ஆர். விலை ரூ. 21/—

## GH

சென்னை அரசாங்க பொது மருத்துவமனையை மையமாக வைத்து பி. வி. ஆரால் எழுதப்பட்ட சுவையான நாவல். விலை ரூ. 16.50/—

## மௌனமாய்ப் பெய்த மழை

இரா. வேலுச்சாமி மண்ணில் கால் பதித்து எழுதிய அருமையான கவிதைகள் வாழ்வின் சுவைகளை, அவலங்களைக் கூறுகிறார். விலை ரூ. 7.50/—

## என்ன? ஏன்? எப்படி?

மாணவர்களுக்கும் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருப்பவர்களுக்கும் தேவையான நூல். பல்வேறு விஷயங்களை இருநூறு கேள்வி பதில் வடிவங்களில் தந்துள்ளார் எஸ். சங்கரன். விலை ரூ. 13/—

மேற்கண்ட ஏழு நூல்களின் பதிப்பாளர் — கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை — 17.

## காணிக்கை

நான்கு ஓரங்க நாடகங்களில் புராணம், காவியக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு சுவையாகப் பின்னியுள்ளார் ஆசிரியர் மதுரை ஜேஸன். விலை ரூ. 5/—

(எலெஸ்ஸியல் பப்ளிகேஷன்ஸ், 1719 திருச்சிப் பாதை, கோயம்புத்தூர் — 641 045.)

## மாணவச் செல்வங்களுக்கு போப்பாண்டவர்

போப்பாண்டவர் இரண்டாம் அருள் சின்னப்பருடைய வாழ்க்கையினையும், பாரதத்திற்கு அவர் சமீபத்தில் செய்த விஜயத்தினையும் கூறும் நூல். ஆசிரியர் கவியழகன். விலை ரூ. 9/—

(சோமு புத்தக நிலையம், 42, அப்பர்சாமி கோவில் தெரு, மயிலாப்பூர், சென்னை — 4.)

## தெய்வத் திருப்பாடல்கள்

கவிஞர் ஏ. நாராயணன் ஸ்கந்த மாதா பதிகத்தையும், ஸ்கந்த குரு வெண்பாவையும் மற்றும் பல தெய்வப் பாடல்களையும் இயற்றியுள்ளார். விலை ரூ. 6.50/—

## அழகிய வாழை

குழந்தைகள் பாடும் வகையில் எளிய பாடல்களை இயற்றியுள்ளார் கவிஞர் ஏ. நாராயணன்.

விலை ரூ. 9/—

(இரண்டு புத்தகங்களின் பதிப்பாளர் கற்பூரம் பதிப்பகம், 29B, மாணிக்க வாசகர் தெரு, அம்மாப்பேட்டை, சேலம் — 636 003.)

## ஆனந்தமாய் வாழ ஆசார்யாள் வழிமுறைகள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய பரமாச்சார்ய ஸ்வாமிகளின் அருளுரைகளைத் தொகுத்துத் தந்துள்ளார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 12/—

## ஸ்ரீ துர்கா தேவி ஸ்தோத்திர மாலை

ராகு கால பூஜை, வழிபடும் முறைகள், ஸ்தோத்திரங்கள் மற்றும் பாடல்களைத் தொகுத்துள்ளார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 2.25/—

## திருமணம் கைகூடும் திருமணஞ்சேரி

திருமணமாகாதவர்கள் திருமணஞ்சேரி சென்று வழிபட்டால் நினைத்த பலன் கூடும் என வழிபடும் முறைகள் பற்றி விரிவாகக் கூறுகிறார் அம்மன் சத்தியநாதன்.

## ஸ்ரீ ராகவேந்திர மகிமை

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் முழுமையான வரலாற்றையும், அவர் செய்த அற்புதங்கள், மகிமைகள் பற்றிக் கூறுகிறார் அம்மன் சத்தியநாதன். விலை ரூ. 35/—

## சௌபாக்கியமளிக்கும் ஸ்ரீ சந்தோஷி கவசம்

ஸ்ரீ சந்தோஷி மாதா பூஜைக்கான விரத முறை, வரலாறு, பூஜைகள், பாடல்கள் இவற்றைத் தொகுத்துத் தந்துள்ளனர் கவிஞர் சக்திதாசனும், அம்மன் சத்தியநாதனும். விலை ரூ. 2.50/—

(மேற்கண்ட ஐந்து புத்தகங்களின் பதிப்பாளர் — அம்மன் பதிப்பகம், 39, வி.எம். தெரு, இராயப்பேட்டை, சென்னை — 4.)

# இதற்கு என்ன செய்வது



தொகுப்பு:
டி. ஆர். ரமேஷ்.

என் தங்கைக்கு 32 வயது ஆகிறது. கல்யாணம் ஆகி இரண்டு குழந்தை இருக்கிறது. அவள் கணவன் ஒரு குடிகாரன். அவளுக்கு முதல் குழந்தை பிறந்து 10 நாளில் அவள் கணவன் எங்கோ ஓடிவிட்டான். மறுபடி வந்தான். அடுத்து ஒரு குழந்தை. ஒரு வருடம் அவளிடம் இருந்தான். இதற்கு இடையில் அவனுக்கு ஒரு சின்ன வீடு. அவளுடன் இருந்து கொண்டு இவளை அடிப்பதும் துவைப்பதுமாக இருந்தான். இதை எல்லாம் பார்த்துவிட்டு நாங்கள் அவளை அவள் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டோம். இப்பொழுது ஒன்றரை வருடம் ஆகிறது. அவன் மறுபடியும் எங்கோ ஓடிவிட்டான். இவள் பிறந்த வீட்டில் நல்ல வசதி. ஆனால் அவளை அங்கு மதிக்க மாட்டேன் என்கிறார்கள். நீங்கள் என்ன செய்வது?

பிறந்த வீடும் இல்லாமல், புகுந்த வீடும் இல்லாமல் இப்படி இன்றைக்குக் கஷ்டப்படும் பெண்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இன்றைய நிலையில் இவர்களுக்குத் தேவை மனோ தைரியமும், பொறுமையும், விடா முயற்சியும்தான்.

இரண்டு குழந்தைகளுடன் தங்களுடைய தங்கை எந்தவித வருமானமும் இல்லாமல் எப்படித் தனியாக வாழ முடியும்? முதலில் ஒரு வேலைக்கு முயற்சி செய்யச் சொல்லுங்கள். அல்லது ஏதேனும் ஒரு கைத்தொழிலை கற்றுக் கொண்டு அதைக் கொண்டு வருமானத்திற்கு வழி செய்து கொள்ளட்டும்.

தன் சொந்தக் காலில் நிற்க ஆரம்பித்து விட்டால், மதியாதாரும் மதிப்பார்கள்.

பெயர் வெளியிட விருப்பம் இல்லை

நான் என் மகளை (வயது 17) வேறு சாதியைச் சார்ந்த மணமகனுக்கு (இருவருமே விரும்பிய . காரணத்தால்) இம்மாவட்டத்தில் உள்ள ஒரு கோவிலில் முறைப்படி பதிவு செய்து திருமணம் செய்து கொடுத்தேன். மேலும் திருமணம் முடிந்து பதிவுத் திருமணமும் ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் செய்து வைத்தோம். பையனின் பெற்றோர்கள் எங்கள் மேல் வழக்கு போடுவதாகவும், பெண்ணின் வயது 17 என்பதை 20 என்று கூறித் திருமணம் செய்துள்ளதாகவும், அதனால் இத்திருமணம் சட்டப்படி செல்லாது என நிறுவப் போவதாகவும் பயமுறுத்துகின்றனர்.

இத்திருமணத்திற்கு வந்து சாட்சியளித்தவர்களையும் வயதை மறைத்து பொய் வயது கூறினார்கள் என்பதற்காகவும் அவர்கள் மீதும் வழக்கு போடுவதாக மிரட்டுகின்றனர். மேலும் என் மருமகனுக்கு வேறு இடத்திலும் பெண் பார்ப்பதாக அறிகிறோம்.

எனவே முறைப்படி கோவிலில் நடந்த திருமணமும், ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் நடந்த திருமணமும் செல்லாதபடி ஆக்க அவர்களுக்கு வழியுண்டா?

சாட்சிகள் என்பவர்கள், இவர்கள்தான் கையெழுத்துப் போட்டார்கள் என்று கூறுவதற்குத்தான் சாட்சி. மற்றவற்றிற்கு அல்ல.

தங்களுடைய பெண்ணிற்கு இப்போது என்ன வயது, மேஜராகி விட்டாரா என்பது தெரியவில்லை. 'மேஜராகாத தன்னை ஏமாற்றித் திருமணம் செய்து விட்டனர்' என்று பெண்தான் வழக்குத் தொடரலாமே தவிர மற்றவர்கள் செய்ய முடியாது. தவிரவும் கோர்ட்டில் வழக்கு நடைபெற்றால், 'தான் நன்கு தெரிந்து கொண்டு சுயநினைவுடனே விரும்பி இத்திருமணம் செய்து கொண்டதாக' க் கூறினால் தீர்ப்பு சாதகமாகலாம்.

ஜேயெம்கவி திருச்சி.

நாங்கள் இரு சகோதரிகள். இரு சகோதரர்கள். என் தந்தை கட்டிய வீட்டில் எங்கள் நால்வருக்கும் சமமான பங்கு உரிமை கிடைத்திருக்கிறது. எங்களுடைய அந்த வீட்டில் குடியிருப்பவர் (எங்கள் அம்மா இருக்கும்போது குடி வந்தவர்.) இப்பொழுது எங்களுக்கு

அந்த வீட்டை காலி செய்து தர மறுக்கிறார். எங்கள் நால்வருக்கும், குழந்தைகள் படிப்பு, கல்யாணம் என்று செலவுகள் இருக்கின்றன.

அந்த வீட்டை எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் வாங்கிக் கொள்ளப் பிரியப்படுகிறார். காலி செய்ய மறுக்கும் குடித்தனக்காரர் வீட்டைக் காலி செய்து கொடுக்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்?

நீங்கள் அவர்மேல் நீதிமன்றத்தில் வீட்டைக் காலி செய்து கொடுக்கும்படி வழக்குத் தொடரலாம். ஆனால் மற்றவருக்கு விற்பதற்காக அவரைவீட்டைக்காலிசெய்யும்படி கூற முடியாது. உங்களுடைய சொந்த உபயோகத்திற்காக வீடு தேவை என வழக்குத் தொடரலாம்.

தமயந்தி, சென்னை—1.

என் தந்தை வேலை இழந்து, வியாபாரத்தில் அதிகம் நஷ்டம் அடைந்து தற்பொழுது மிகவும் மன வருத்தத்துடன் இருக்கிறார். (அவர் ரேடியோ பழுது பார்த்தல் கடை நடத்திக் கொண்டிருந்தார்) என் தந்தை ஒரு நல்ல வியாபாரம் தொடங்கலாம் என்றால் அதற்குத் தேவையான முன் பணம் எங்களிடம் இல்லை.

அரசு புதிதாக வியாபாரம் செய்வதற்கு ஏதாவது உதவி புரிகிறதா? நாங்கள் லோன் வாங்க வேண்டுமென்றால் எங்கு, எவரை, எப்படி அணுக வேண்டும்? லோன் என் தந்தையின் பெயரில் வாங்க முடியுமா? (அவருக்கு வயது 55). அல்லது என் பெயரில் வாங்கலாமா? (நான் பி. எஸ்.ஸி. (வேதியியல்) பட்டதாரி, வயது 22.) எத்தகைய தான வியாபாரம் செய்யலாம்?

தங்களுடைய தந்தையின் பெயரில் கடனுதவி தரமாட்டார்கள். ஏனெனில் வயது ஒரு காரணம். பட்டதாரியான தங்களுடைய பேரில் கடனுதவி கிடைக்கும். அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகள் கடன் தருகின்றன. நீங்கள் சென்னையில் இருப்பதால், சென்னை பல்கலைக்கழக வளாகத்திலுள்ள 'ஆலோசனை வழங்கும் நிலையத்தை' அணுகலாம்.

ஒரு வாசகர் ஹைதராபாத்.

எனது தாத்தாவின் (அம்மாவின் அப்பா) கிராமத்துப் பூர்வீக சொத்து (நிலம் மற்றும் உடைமைகள்) முக்கால் பாகமும் எனது தாய் மாமன் விற்று எடுத்துச் சென்றுவிட்டார். மீதம் ஒரு வீடும், 3 ஏக்கர் நிலமும் (மாமா பெயரில் தாத்தா செட்டில்மெண்ட் செய்திருக்கிறார்.) இருக்கிறது. எனது தந்தைக்கு வரும்படி இல்லை. நாங்கள் மிகவும் கஷ்ட ஜீவனம் நடத்துகிறோம். அம்மாவின் பூர்வீகம் தமிழ்நாடு ஆதலால் சொத்து உடைய ஊரின் வக்கீலைக் கேட்டதற்கு இரண்டு பக்கத்தில் யாராவது இறந்தால் (எனது அப்பா அல்லது தாத்தா) சூட் போடலாம் என்று சொல்கிறார். பாப்பர் சூட் அல்லது கேஸ் போட்டால் எங்களுக்குச் சொத்தில் பங்கு கிடைக்குமா?

கீரையை நறுக்கி சுத்தம் செய்து மிக்ஸியில் போட்டு நன்றாக அரையுங்கள். விழுதாகிவிடும். இதைக் கொதிக்க விட்டு மிளகு, சீரகம், தேங்காய்ப்பூ போட்டுக் கிளறி இறக்கிவிட்டால் கீரை மசியல் ரெடி! வேகவிட்டுப் பிறகு மசிக்கும் வேலையும் மிச்சம்! எரிபொருளும் மிச்சம். இரண்டே நிமிஷத்தில் மசியல் ரெடியாகிவிடும். டேஸ்ட் மாறாது பச்சைப் பசேலென்று இருக்கும்.

— உமா குமார்.

உங்களுடைய தந்தைக்கும், இந்தச் சொத்திற்கும் சம்பந்தமில்லை. மற்றபடி பாப்பர் சூட் போடலாம். வழக்கு உங்கள் பக்கம் ஜெயமான பிறகு நீங்கள் ஸ்டாம்ப் டியூடி கட்ட வேண்டி வரும்.

ஒரு வாசகி

என் அப்பா 1943ல் ஒரு வீட்டை ஏலத்தில் எடுத்தார். என் அப்பாவுடன் பிறந்தவர்கள் இல்லையாதலால், வீடும் என் தாய் மாமன் வீட்டிற்குப் பக்கத்தில் இருந்தபடியாலும் வாடகை வாங்குவது, வேறு வாடகைக்கு வைப்பது போன்றவற்றை என் மாமாவே பார்த்துக் கொண்டார். அப்பாவும் வசதியாக வாழ்ந்து கொண்டிருப்பதால் அதைப் பற்றிக் கண்டுகொள்ளாமல் விட்டு விட்டார். இதற்கிடையில் மாமா சேர்மனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பொழுது அப்பாவின் அனுமதி, கையெழுத்து இல்லாமலேயே அவருடைய பெயரில் வரியை மாற்றிக் கொண்டார்.

இப்பொழுது மாமா தானே செட்டில்மெண்ட் எழுதிக் கொண்டு வந்து இதில் கையெழுத்து போடு. இல்லையெனில், மற்ற வீட்டை உன்னால் விற்காமலும், வாடகை வராமலும் செய்துவிடுவேன் என்று மிரட்டி, அதன்படியே என் அப்பா இருந்த வீட்டை அவர் வெளியே சென்ற போதே பூட்டிவிட்டார்.

அந்த ஊரில் அவரை எதிர்த்து யாரும் பேச மாட்டார்கள். அவர் சொல்வதைதான் நாம் கேட்க வேண்டும். போலீஸ் உதவியை நாடியும் பிரயோஜனமில்லை.

ஒருவர் பதவி, அதிகாரம் இவற்றை வைத்திருக்கிறார் என்பதற்காகவே அவருக்கு எதுவும் செய்ய உரிமை வந்துவிடாது. நீங்கள் நீதிமன்றத்தின் உதவியை நாடுங்கள். உங்கள் தந்தையின் பெயரில் வீடு இருக்கும்போது, அதிகாரத்தைப் பயன்படுத்தி வரி முதலானவற்றை மாமா தன் பெயரில் மாற்றிக் கொண்டார் என்பதை நிரூபியுங்கள். நீதி நிச்சயம் வெற்றி பெறும்.

சென்ற இதழ் தொடர்ச்சி...

# தோல் ஆரோக்கியம் காட்டும் கருவி



(பதில்கள்: தோல் மருத்துவ நிபுணர் டாக்டர் எஸ். எம். அகஸ்டின்.)

தலையில் அதிகப் பொடுகு ஏற்படுவது தோல் வியாதியினாலா?

டா: தலையிலுள்ள தோலினடியிலுள்ள எண்ணெய்ச் சுரப்பிகள் அதிக அளவு சீபம் (Cebum) சுரக்க இது தோலுக்கு வெளியே வந்து மெல்லிய தகடுகளாக உறைந்துவிடுகின்றன. இவையே பொடுகு எனப்படும். இது இருப்பதால் அரிப்பு ஏற்படும். சொரியும்போது நகம் பட்டு இரத்தம் கசிந்து புண் ஏற்படும். முடி உதிரும். புண்களில் அழுக்கு சேர்ந்து பேன் வரவும் வாய்ப்பு உண்டு. பொடுகு உள்ளவர்கள் தினமும் தலைக்குக் குளிப்பதுடன் அதற்கென விசேஷமாக உள்ள ஷாம்பூவைப் பயன்படுத்தி வாரம் ஒருமுறை குளித்தால் பயன் உண்டு. தேவையானால் தோல் மருத்துவரை நாடிச் சிகிச்சைப் பெறுவதும் அவசியம்.

சிலபெண்களின் விரல்நகங்கள் சொத்தையாக, கறுப்பாக இருக்கின்றன. சிலரது கைவிரல் நகங்களின் வேர் பாகத்தில் சதை வீங்கி, சீழ் பிடிக்கிறது. இவை எதனால்?

டா: அதிகமாகத் தண்ணீரில் வேலை செய்யும் பெண்களுக்கு நகச்சுற்று நோய் வரும். இவர்கள் வீட்டுவேலை செய்ய ஆள் வைத்துக் கொள்ள வேண்டும். இது இயலாதெனில் ஒவ்வொரு முறை நீரைத் தொட்ட பிறகும் உலர்ந்த துணியால் நன்றாகத் துடைக்க வேண்டும். கூடிய வரை தண்ணீர் தொடுவதைத் தவிர்க்க வேண்டும். நகம் கெட்டுக் கறுப்பாவது ஃபங்கஸ் காரணமாகவும் இருக்கலாம். தோல் மருத்துவரை நாடினால் தக்க மருந்தைக் குறிப்பிடுவதுடன் நகங்களைப் பழையபடி பளபளப்பாக்கும் வழியையும் கூறுவார்.

## சேற்றுப் புண், பித்த வெடிப்பு

சேற்றுப் புண், பித்த வெடிப்பு ஏன் ஏற்படுகிறது? என்ன மருந்தைப் பயன்படுத்தலாம்?

டா: சேற்றுப் புண் அதிகமாக நீரிலும், சேற்றிலும் வேலை செய்வதால் ஏற்படுகிறது. வேலை முடிந்த பிறகு பாதங்களையும், விரல் இடுக்குகளையும் நன்றாகத் துடைத்து உலர்த்திய பின் ஜென்ஷியன் வயலெட் என்ற மருந்தைத் தடவ வேண்டும். மிக உலர்ந்த தோல் உள்ளவர்களுக்குப் பித்த வெடிப்பு வரும். இவர்கள் பாதங்களை மூடும் காலணிகளை அணிவதால் வியர்வை காயாமல், மூடும் தோல் வறட்சி ஏற்பட்டு வெடிக்காமல் இருக்கும். குளித்த பிறகும் இரவு படுக்கும் முன்பும் வறண்ட தோல் பகுதிகளில் வாசலேன் தடவ வேண்டும். பாதங்களை வெந்நீரில் சிறிது நேரம் வைத்து நன்றாகத் துடைத்து விட்டு மருத்துவர் கூறும் களிம்பைப்

போடலாம். இதனால் பலன் ஏற்படும்.

அழகுக்காகத் தோலில் உள்ள ரோமங்களை நீக்குவதும், தோல் வெளுக்கச் செயற்கை முறையில் மருந்துகளைப் பயன்படுத்துவதும் நல்லதா?

டா: தோலிலுள்ள ரோமங்களை நீக்குவதால் தோலுக்குக் கெடுதல் ஏதும் விளைவதில்லை. ஆனால் பயன்படுத்தும் இரசாயனப் பொருள் உடலுக்கு அலர்ஜி ஏற்படுத்தக் கூடாததாக இருக்கவேண்டும். மற்றபடி தோல் வெளுப்பது என்பது இயலாத காரியம். இதற்காகப் பணத்தையும் நேரத்தையும் வீணடித்துத் தோலின் ஆரோக்கியத்தையும் கெடுத்துக் கொள்ள வேண்டாம்.

**குங்குமப்பூ குழந்தையைச் சிவப்பாக்குமா?**

கர்ப்பிணிப் பெண்கள் குங்குமப்பூ சாப்பிட்டால் சிவந்த குழந்தை பிறக்குமா?

டா: இது ஒரு மூட நம்பிக்கை. குங்குமப் பூவால் சிவந்த குழந்தை பிறக்காது. கலப்படமான குங்குமப் பூவை உண்டு உடலைக் கெடுத்துக் கொள்ளாமல் இருப்பது நலம்.

முகத்தில் பருக்கள் வராமலிருக்க என்ன வழி? தழும்புகளை எவ்வாறு நீக்கலாம்?

டா: சோப்பு போட்டு அடிக்கடி முகத்தைக் கழுவலாம். சாக்லேட், முந்திரி பாதாம்பருப்பு போன்ற கொழுப்புச் சத்துள்ள பொருட்களையும், உணவில் நெய், எண்ணெய், வதக்கிய, பொரித்த பண்டங்களையும் தவிர்த்தால் பருக்கள் வருவது குறையும். மலச்சிக்கலைத் தவிர்ப்பதும் அவசியம். சருமநோய் நிபுணரை அணுகி அதற்கான களிம்பை தினமும் தடவி, மருந்துகளையும் சில மாதங்கள் உட்கொள்ளவேண்டும். எக்காரணம் கொண்டும் பருக்களைக் கிள்ளக் கூடாது. இதனால் தழும்புகள் தோன்றுவதைத் தவிர்க்கலாம்.

பாலுண்ணி எவ்வாறு ஏற்படுகிறது? சிகிச்சை என்ன?

டா: இது சருமத்தில் ஏற்படும் ஒரு வைரஸ் வியாதி. சிறுவர்களுக்கு அதிகமாக வரும். இது ஒரு தொற்றுநோய். ஆதலால் சிறுவர்களிடமிருந்து சில சமயம் பெரியவர்களுக்கும் வரும். தோல் நோய் மருத்துவரை அணுகி பாலுண்ணிகளை எடுத்துவிட வேண்டும்.

மஞ்சள் அதிகமாக முகத்துக்குத் தடவினால் தோல் முரட்டுத் தோலாக மாறும் என்பது உண்மையா?

டா: மஞ்சள் முகத்திலுள்ள எண்ணெயை நீக்கி வறட்சியைக் கொடுக்கும் தன்மையுடையது. எனவே மஞ்சளை மிகுதியாகப் பயன்படுத்தாமல் மிதமாகப் பயன்படுத்த வேண்டும்.

சிலருக்குப் பிறவியிலேயே தோல் மிகவும் சொரசொரப்பாக இருப்பது ஏன்? மென்மையாக மாற்ற முடியுமா?

டா: பிறவியிலேயே தோல் சொரசொரப்பாக இருந்தால் அதை மீன் தோல் வியாதி என்கிறோம். இதனை நீக்க மருந்து கிடையாது. குளித்த பின் தோலில் சிறிது எண்ணெய் தடவுவதன் மூலம் ஓரளவு மிருதுவாக்கலாம். பருவமடையும் சமயம் சிலருக்கு மென்மையாக மாறிவிடலாம்.

சரஸ்வதிபுரம் மாதர் சங்கம் அண்மையில் தங்களுடைய பதிமூன்றாவது ஆண்டுவிழாவைக் கொண்டாடியது. விழாவுக்குவந்திருந்த திருமதி வளர்மதி, "பதிமூன்று ஆண்டுகளாக இத்தனை பெண்களைச் சேர்த்து ஒரு சங்கத்தைத் தொடர்ந்து நடத்துவது என்பதே பெரிய விஷயம்" என்றார். டி. வி. செய்திவாசிப்பாளர் திருமதி சந்தியா இராஜகோபால் ஏழைகளுக்குப் புடவை, பள்ளிச் சீருடைகள் வழங்கினார்.

ஸ்கே பீஸ் என்பது என்ன? சொறி, சிரங்கு வரக் காரண மென்ன? என்ன சிகிச்சை?

டா: சிறுவர்கள் பள்ளியிலோ, வெளி யிலோ விளையாடும்பொழுது கிருமி கள் விரல் இடுக்குகளில் புகுந்து அரிப்பை ஏற்படுத்தும். இது ஸ்கே பீஸ் எனப்படுகிறது. தொடர்ந்து சொறிவதால் கிருமிகள் தோலை ஊடுருவி இரத்தத்தில் கலந்துவிடுவ தால் சில சமயம் சிறுநீரகத்தைக் கூட இது பாதிக்கும் அபாயமுண்டு. எளிதில் குடும்பத்திலுள்ள மற்றவர் களுக்கும் பரவும். நோயின் அறிகுறி தென்பட்டதுமே மருத் துவச் சிகிச்சை பெறுவது அவசி யம். சுகாதாரக் குறைவினாலும், புழுதியில் விளையாடுவதாலும் சொறி, சிரங்கு ஏற்படும். வெளி யில் விளையாடிவிட்டு வந்தவுடன் கை கால்களைச் சுத்தமாகக் கழுவு வதும், தினமும் தவருமல் தேய்த் துக் குளிப்பதும், வருமுன் காக்கும் முறைகளாகும். கை வைத்தியமாக எதையும் செய்வதை விடுத்து மருத் துவரை உடனே அணுகிச் சிகிச்சை பெறுவதால் சொறி, சிரங்கு விரை வில் குணமாவதுடன் பின் விளைவு களையும் தவிர்க்கலாம்.

**உள்ளங்கையில் வியர்த்தால்....**

சிலருக்கு உள்ளங்கைகளில் எப்போதும் மிகுதியாக வியர்த் துக் கொண்டே இருக்கும். இதற்குஎன்ன காரணம்? நிறுத்த வழியுண்டா?

டா: இப்படி வியர்ப்பது உடலில் உள்ள உஷ்ணத்தைக் குறைப்பதற்காக இல்லை. சிலர் மிகவும் உணர்ச்சி வசப்படுபவர்களாக இருப்பதுவே இதற்குக் காரணம் இதனைக் கட்டுப் படுத்த எளிய சிகிச்சை எதுவும் கிடையாது. ஆனல் இவ்வாறு வியர்ப்பது சிலரது வேலையே போய் விடும் அபாயத்தை ஏற்படுத்தும். இந்நிலையில் இவர்களது வியர்வை சம்பந்தமான நரம்புகளை அறுவைச் சிகிச்சை மூலம் கட்டுப்படுத்தினல் வியர்ப்பது நின்றுவிடும்.

சிலருக்கு திடீரென்று கறும் புள்ளிகள் தோன்றுவது எத ஞல்?

டா: கொக்கிப் புழு வயிற்றில் இருந் தால் இத்தகைய கரும் புள்ளிகள் தோன்றும். மலத்தைச் சோதனைச் சாலையில் சோதித்து, மருத்துவர் உதவியுடன் சிகிச்சை பெறலாம்.

தொழுநோய் பரம்பரை வியா தியா? இது தொற்றுநோய் என் பதும், கூழைப் பாம்பு கடித்தால் தொழுநோய் வரும் என்பதும் உண்மையா?

டா: தொழுநோய் பரம்பரை வியாதி இல்லை. கூழைப் பாம்பிற்கும் இந் நோய்க்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இது இருவகைப்படும். ஒன்று தொற்றும் வகை. இவ்வகை நோய் உள்ளவர்களின் கை, கால் விரல்கள் மடங்கியும், குறைந்தும் இருக்கும். முகம் வீங்கி, சிவந்து இருக்கும். மூக்கு அமுங்கி இருக்கும். இவர்களது மூக்குச் சளியால் கிருமி கள் மிகுதியாக இருக்கும். அவை காற்றின் மூலம் பரவி மற்றவரை அடைந்தால் அவர்களுக்கும் அந் நோய் வரலாம். இரண்டாவது வகைத் தொற்ருத வகை. இவர்கள் உடம்பில் ஆங்காங்கே வெளுப்பா கவோ, தாமிர நிறத்திலோ படை கள் இருக்கும். இருவகை நோய்க ளுக்குமே சிகிச்சை உண்டு. கட்டா யம் குணமாக்கலாம்.

தொழுநோய் ஏற்பட்டிருக்கிறது என்பதை ஆரம்ப நிலையிலேயே எவ்வாறு அறிய முடியும்?



